# ஆத்மாநாம் கவிதைகள்

தொகுப்பாளர் : பிரம்மராஜன்

தன்யா
&
பிரம்மா

**Atmanam Kavithaigal**
Collected Poems

First Published
September 1989

Price Rs. 28/- 35/-

*Edited by* Bramharajan

*Introduction* © Bramharajan

*Poems and other materials by* Atmanam
© Smt. S.K. Kalavathi

*Phototypeset by* Art Prints
*105 Luz Church Road*
*Madras - 600 004*

*Printed at* Sudarsan Graphics
*14 Neelakanta Metha Street*
*Madras - 600 017*

*Published by* Dhanya & Bramha Publishers
*Burn View*
*Coonoor Road*
*Ooty - 643 001.*

***2083 ஆகஸ்ட் 11*** என்ற தலைப்பிட்ட கவிதை ஆத்மாநாம் இரண்டாவதாகத் தொடங்கிய சிற்றேடு. இதற்கு ***2083 ஒரு அகால ஏடு*** என்று பெயரிட்டு தட்டச்சு செய்து ஒற்றைத் தாளில் வெளியிட்டார். இந்த ஒற்றைக் கவிதையுடன் இதழ் நின்றுவிட்டது. ***ஆரம்பம்*** கவிதையில் தொடங்கி ***தரிசனம்*** வரையிலான 39 கவிதைகள் ***காகிதத்தில் ஒரு கோடு*** என்ற தொகுப்பாக 1981 ஆம் ஆண்டு மே மாதம் *ழ* வெளியீடாக பிரசுரிக்கப் பட்டது. சில கவிதைகள் ***படிகள், நிகழ், மீட்சி*** போன்ற இதழ்களில் வெளிவந்தன. பிற கவிதைகள் எல்லாம் முதல் முறையாக அச்சேறுகின்றன.

திரு. ராஜசுந்தரராஜன், நாகார்ஜுனன், கலாப்ரியா, சத்யன், பாலா என்கிற பாலு V.K. பாலசுப்பிரமணியன், ஆகியோரின் உதவியின்றி இப்புத்தகம் சாத்தியமாகி இருக்காது.

# ஆத்மாநாமைப் பற்றியும் கவிதையைப் பற்றியும் ஆத்மாநாம் ஐ

சமீபகாலமாகக் கவிதை எழுதிவரும் 25 வயது இளைஞர். தனிமனிதனுக்கும் சமூகத்திற்கும் உலகத்திற்கும் இடையே உள்ள தொடர்பு பற்றி தனிமனிதனின் அவலங்கள் வாழ்க்கை மதிப்பீடுகள் பற்றி கவிதைகள் வாயிலாக வெளிப்படுத்தும் முயற்சியில் சுதந்திரம் முதலியன தற்காலக் கவிதைக்குக் கிடைத்துள்ள ஒரு முக்கியமான வசதி. இதன் மூலம் விரிவான ஆன்மீக தத்துவ அரசியல் சமூக ஆராய்ச்சிகளுக்கான வழிகள் பல உண்டு. இலக்கண அறிவு இல்லாதவர் தற்காலப் பேச்சு வழக்கே கவிதை வெளியீட்டிற்கு ஏற்றதாகக் கருதுபவர். இதன் எளிமை கவிதையை சமகாலத்தினர் எல்லோரும் புரிந்து கொள்வதற்குப் பயன்படுகிறது. பேச்சு வழக்கு பிற்கால மொழியியலாளருக்கு உதவி செய்யும். கலாச்சார மதிப்பீட்டிற்கும் உரிய பார்வைக்கும் சொற்செட்டுக்கும் மேற்பட்ட ஒன்றுதான் கவிதை. மக்களிடமிருந்து வரும் கவிதை மீண்டும் மக்களிடம் செல்லும் போது ஒவ்வொரு கவிஞனுக்கும் உள்ள ஒரு 'தொனி'யுடன் செல்கிறது. அது எவ்வளவு தூரம் ஆழமானதாகவும் வலுவுள்ளதாகவும் இருக்கிறதோ அவ்வளவு தூரம் அது மக்களைத் தாக்கும். பிரசுர சாதனங்களும் சமூகத்தில் உள்ள பொருளாதார வேறுபாடுகளும்தான் கவிதை சிலரிடையே மட்டும் புழங்குவதற்குக் காரணமாயிருக்கின்றன. கொள்கைகளைப் பற்றிய அதிகப்படிப்பு இவருக்கு இல்லாததால் வாழ்வில் சொந்த அனுபவங்களிலிருந்து மட்டுமே கவிதை எழுதுகிறார். ஒவ்வொரு கவிதையும் புதிதாகப் பிறக்கும் பச்சைக் குழந்தையைப் போல அதனால் கவிதைகளைக் குத்திக் கிளறிப் பார்க்காமல் ஆர்வத்தோடு நாசூக்காக ஏன் எப்படி எவ்வாறு என்று கேள்விகளுடன் அணுகி வந்தால் அதன் முழு வர்ணங்களும் தெரிய வரும்.* படிப்பவனின் அறிவுநிலைக்கேற்ப கவிஞனுக்கே தெரியாத சில அர்த்தங்கள் பிடிபடும். கவிதையில் உள்ள அதிசயங்களில் இதுவும் ஒன்று. இலக்கியத் தொடர்பின் காரணமாகவே வாழ்க்கை வாழத் தகுதியுள்ளதாக நினைக்கும் இவர் இலக்கியத் தொடர்பாலேயே வாழ்க்கை முடியுமோ என்றும் அஞ்சுகிறார்.

ஆச்சரியம் நிறைந்த குழந்தையின் பார்வை வாயிலாகத் தெரியும் மனநிலை தொடர்ந்து இருக்க விருப்பப்படுகிறார். ஒரு கணத்தில் உலகம் முழுவதும் வியாபித்துள்ள வெவ்வேறு மனிதர்களின் செயல்களை நினைக்கும் போது உண்டாகும் பிரமிப்பு, கரையில் நின்றபடி நீலக்கடலை வானம் தொடும் இடம் வரை பார்ப்பதில் உள்ள இன்பம் தன்னை மறக்கச் செய்யும். ஒவ்வொரு மலையையும் அதன் உச்சியை அடைய நினைக்கும் மனம் ஆகியவற்றில் மனம் இழக்கிறார். உண்மையைத் தவிர வேறு எதுவும் இலக்கியமாக முடியாது என்பதில் நம்பிக்கை உள்ளவர். கோவிலுக்கு அதிகம் வழிபடப் போகாதவர். மனிதசக்திக்கு மீறிய ஒன்று மனிதனிடம்தான் உள்ளது என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை உள்ளவர். கவிதைகளின் வெற்றி தோல்விகள் பற்றிய விவாதம் அபத்தம் என்று நினைக்கிறார். தன்னிலிருந்து தானே விடுபடும்போது ஒருவன் மனிதனுக்கு ஒருபடி மேலே செல்கிறான். இவை கவிதைகள் என்றால் கவிதைகள்தான். கவிதைகள் இல்லை என்றால் என்ன செய்வது. ஆத்மாநாமைப் பொறுத்தவரை இவை கவிதைகள்தான். அவரைப் பொறுத்தவரை இந்த வரையறையில்தான் ஆத்மாநாமுக்கும் உலகத்திற்கும் உள்ள தொடர்பு தெரிகிறது. இருவருக்கு இடையே உள்ள மெல்லிய கண்ணாடித் திரையை உடைக்கப் பார்க்கும்போது அவை தடித்த இரும்புச் சுவர்களாகிவிடுகின்றன. இது அறிவு என்றால் இது கவிதை.

* இந்த சுய அறிமுகக் கட்டுரையை ஆத்மாநாம் தனது 25 வது வயதில் எழுதியிருக்கிறார். ஆனால் எந்த இதழிலும், நூலிலும் இதுவரை வெளியிடவில்லை. மேலும் இன்று ஸ்ட்ரக்சுரலிஸத்தில் பிரபலமாகி வரும் Reader Reception Theory யை அன்றே *(1976)* முன்னேக்கி இருப்பது ஆச்சரியத்தைத் தருகிறது. 1981 ஆம் ஆண்டு திரு. யேசுராஜா, திரு.சுந்தர ராமசாமி இவர்களுடனான சந்திப்பில் Cre-Aவில் இதே விஷயத்தை உறுதிப் படுத்திப் பேசியதாக நேர்ப்பேச்சில் கூறியிருக்கிறார். அதாவது கவிதை எழுதப்பட்ட பின்பு கவிஞனுக்கே புரியாமல் கூட போகலாம். ஆனால் கூர்ந்து வாசிக்கும் ஒரு வாசகன் கவிதையை அணுகி விட முடியும். *(தொகுப்பாளர்)*

ஆத்மாநாம்

Madras 600 053
July 23 1982

Dear Bramharajan

The book size is Penguin Modern Poets (Brodsky) size. 5" 7¾". The cover is made exactly to that size. The book cover should be printed on white board with maroon or Olive Green colour tint till the drawing lines. There should be white space in the drawing. The drawing and lettering can be Black Colour. (i.e.) There should be *Two Blocks*. One for tint till the border lines of the drawing and another lettering with drawing. I hope I am clear in conveying what the artist K. Muralidharan has told me. If you need any clarification please write to me. Please inform Mr. Meera * accordingly. Mr. Rajagopal was telling me that the size is new to Tamil books and care should be taken.

The other drawings are to be printed against each poem which I have mentioned on the reverse of the drawings. The direction is also marked. You kindly let me know how the drawings have come.

With love
Yours
Atmanam.

* *1982 வருடத்தில் ஆத்மாநாமுக்கு 'காகிதத்தில் ஒரு கோடு' தவிர வேறு எந்த தொகுப்பும் வந்திருக்கவில்லை. எனவே என்னை திரு. மீராவை அணுகி எப்படி யாவது தனது இரண்டாவது தொகுதியான "சில எதிர்கால நிஜங்களை" வெளிக் கொணர எனக்கு ஆத்மாநாம் எழுதியது. மேலும் இந்த சமயத்தில் 'அன்னம் நவ கவிதை' வரிசை வெளிவந்து கொண்டிருந்தது. நவகவிதை வரிசை இதுவரை ஒரு தொகுப்பும் வெளியிட்டிருக்காத கவிஞர்களுக்கு முதலிடம் தந்தது. எனவே எதிர்கால நிஜங்கள் என்னிடமே கைப்பிரதிகளாகத் தங்கிவிட்டது.*

## ஆத்மாநாமின் கவிதைகள்

மென்மையுடனும், அதே சமயத்தில் தீவிரத்தன்மையுடனும் கவிதை எழுதியவர்களில் ஆத்மாநாம் முதன்மையானவர். அபரிமிதமான வேகத்துடன் கவிதைகள் எழுதியவர். மற்ற கலைத்துறைகளில் ஈடுபாடு கொண்டவராக இருந்த போதிலும் அவருடைய சிந்தனையும் வெளிப்பாடும் கவிதையாகவே இருந்திருக்கிறது. இக்காரணத்தினாலேயே, நவீன முகத்திற்கு புதிய பரிமாணத்தை அளிக்க முடிந் திருக்கிறது அவரால்.

தன் கவிதைகளில், தனிமனிதன், சமூக மனிதன் என்கிற நிலைகளுக்கு இடையிலான தடுப்புச் சுவரை ஆத்மாநாம் உடைத்தெறிந்து விடுகிறார். தன்னனுபவங்களுக்கு என்றும் நேர்மையாகவே இருந் திருக்கிறார். தன்னைப் பாதிக்கிற எதைப்பற்றியும் எழுதாமல் அவரால் இருக்க முடிந்ததில்லை என்று நேர்ப் பேச்சில் கூறியிருக்கிறார் இதன் விளைவாய் ஆத்மாநாமின் கவிதை மனம் தன்னைச் சூழ நிகழும் சகல இயக்கங்களாலும் பாதிப்புற்று அவற்றின் பொதுக்குரலாக உருவாகிறது. தான் வளர்த்த ரோஜாப் பதியன்கள், உப்பரிகைக்கு வந்த காக்கைகள் எவரின் பித்ருக்களோ என்ற கேள்வி, விளையாட்டு அரங் கங்களில் கூடாரங்கள் என்ற கவிதையில் விளையாட்டும் அரசியலாக்கப்படும் விதம், சாதாரண புளிய மரத்துடன் ஏற்பட்ட நட்பு, அற்புதத்திற்கும் அப்பாற்பட்ட படைப்புகளை விளைவிக்கும் குழந்தை, 'தான்' யார் என்ற கேள்வி, பிரபஞ்சத்தின் கோடான கோடி அணுக்களில் ஒரு சிற்றணுவாய் அவர் கொள்ளும் உறவு — ஆகிய எல்லாவற்றையும் ஒருங்கிணைக்கும் திறன் அவர் கவிதைகளில் காணப்படு கிறது. இவை எல்லாம் ஒரு பெருங்கவிஞனின் உருவாக்கத்திற்கான அடிப்படை குணம்சங்களாக நமக்குத் தெரிய வருகின்றன

நம்மின் நடப்பு வாழ்க்கையின் அவலம் துல்லியமாகச் சித்தரிக்கப்பட்டிருக்கிறது ஆத்மாநாமின் கவிதைகளில். "கவிதையிலேயே சிந்திக்கிறேமோ?" என்று கேட்ட ஆத்மாநாம் கவிதையை ஒரு சொற் கூட்டத்தின் அமைவாகவே (Pattern) ஆத்மாநாம் பார்த்திருக்கிறார் இந்த வகையில் ஒரு கவிதை ஒரு கவிஞனின் மற்றொரு கவிதையிடமிருந்தும், இதர கவிஞர்களின் கவிதைகளிடமிருந்தும் வேறுபடும். சொற்களின் அமைப்பு, அவை அவற்றுடன் அழைத்துவரும் தொடர்பு படுத்தும் சூழல்கள் (associations) யாவும் ஒரு சொற்கூட்டத்தையும், மற்றொரு சொற்கூட்டத்தையும் தனிப்படுத்துகிறது.

கவிதைகளின் அமைப்பை மீறிச் செயல்படுகிற கருத்துருவங்களை சில கவிஞர்களின் கவிதைகளில் நம்மால் பார்க்க முடியும்.ஆத்மாநாமின் கருத்துருவங்கள் சொற்களின் கட்டமைப்பினுல் கிடைக்கும் பெரும் வீச்சினுல், கவிதையின் உருவத்தையும், கவிதைச் செய்தியையும் சமன் செய்கின்றன. மேலும், கவிதைக்குள் நிகழும் செயல் என்பது கவிஞர்களிடத்தில் விவரணையால் கிடைக்கக்கூடும். ஆனல் ஆத்மாநாமின் கவிதைக்குள் நிகழும் dialectical change என்பது விவரணைக்கு அப்பாற்பட்டு கவிதைக் குள்ளும், படிக்கும்போது வாசகனின் மனநிலைகளுக்கிடையிலும் ஏற்படுகிறது. கவிதையைப் படிக்கத் தொடங்குவதற்கு முன் இருந்த நபராக நீங்கள் கவிதையைப் படித்தபின் இருக்க மாட்டீர்கள்.இந்த இயக்கவியல் மாறுதல் எந்த ஒரு வாசகனையும் பாதித்து ஆத்மாநாமின் கவிதைக்குள் பயணம் செய்யத் தூண்டுகிறது. எனவே ஆத்மாநாமின் கவிதைகளில், சொற்கள் ஒரு சர்வ சதா இயக்கத்தை வெளிப் படுத்திய வண்ணம் இருக்கின்றன.

பிரக்ஞை பூர்வமாக எதிர் கவிதை எழுதியவர்களில் ஆத்மாநாம் முதன்மையானவர். எதிர் கவிதை (Anti Poetry) அழகியலை இரண்டாவது நிலைக்குத் தள்ளுகிறது. ஆத்மாநாமின் கவிதைகளில் படிமங்க ளோ, உருவகங்களோ அவற்றின் செயல் பங்குக்காகப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றனவே அன்றி, வாசகனை ஏமாற்றும் வார்த்தைகளின் அளவில் நீர்த்துப் போகிற ஜாலங்கள் அல்ல.

படைப்பு உருவாக்க நிலை (The Creative Process) பற்றிய கவிதைகளில் ஆத்மாநாமின் "தோற்றங்கள்" முக்கிய இடம் பெறுகிறது. டேட்யூஸ் ரோஸ் விக்ஸ் என்ற போலந்துக் கவிஞர் தன் My Poetry என்ற கவிதையில், கவிதை எவ்வாறு கவிஞனின் மனதில் உருவம் கொள்கிறது என்பதை கவிதை வரிகளி லேயே வெற்றிகரமாக விவரித்திருக்கிறார். ஆத்மாநாம், நவீன வாழ்க்கைச் சூழலில் நாம் ஒவ்வொருவ ரும் நம் ஆளுமைகளை உதிரிகளாகச் சிதறடித்து விட்டது பற்றிக் கூறும்போது அவரின் ஆளுமையை யும், படைப்பு உருவாக்க முறையையும் ஒரே சமயத்தில் தெளிவாக்குகிறார்.

"தோற்றங்கள்" கவிதை நம் எல்லோரையும் ஒவ்வொரு சூழலில் ஒவ்வொரு முகம் கொண்ட, சூழலுக்குக் தகுந்த எதிர்வினைகளை மாத்திரமே தரும் மனிதர்களாக, கூறுபட்ட ஆளுமைகளாக நம்முன்

காண்பிக்கிறார். ஒரு இடத்தில் நவீன மனிதன் டீ கொடுத்து உபசரிக்கிறான். இன்னொரு இடத்தில் அடிமையாக இருக்கிறான் மற்றொரு இடத்தில் ஒரு இயக்கத்தின் தலைவனாக இருக்கிறான். கவிதையில் சொல்லப்படும் 'நாம்', கவிஞனையும் சேர்த்த ஒரு கூட்டுப் பாத்திரமே. இப்பாததிரம் சந்திக்கும் மனிதர்களும் தம் ஆளுமையின் ஒரு படிகத்தின் ஒரு பக்க முகத்தையே காண்பதற்கும், அனுபவம் கொள்வதற்கும் தருகிறார்கள்.

பொதுவாக, பிரச்சினைகளுக்குப் புதிய, ஆனால் பிரதானமான தீர்வுகளைத் தருவது என்ற வகையில் ஆக்கமுறை சிருஷ்டிநிலை கவனத்திற்குரியதாகிறது. மேலும், தனித்துவமான ஒரு கலைஞன் தன்னு டைய பிரச்சனைகளுக்கு தீர்வு காணும்போது, இத்தீர்வு எல்லா மனிதர்களுக்கும் பொதுவாகிறது பெரும்பான்மையான படைப்பாளர்களுக்கு Schizoid அல்லது depressive மனப்போக்குகள் இருக்கின் றன. சிருஷ்டி நிலையில் ஒரு Schizoid மனநிலையும், கவிதையாக அது நிகழும் நிலையில் ஒரு பிளவுபட்ட உணர்வு நிலையும் இருப்பதாக மனவியல் ஆய்வாளர்கள் 'சிருஷ்டி நிலையை'ப் பற்றிக் கூறுகிறார்கள் ஆனால் ஆளுமையில் சிதறுதல் கொண்ட நிலையை அறிந்தும், உணர்ந்தும், அதற்குப் பிறகு இந்நிலை யில் தனக்கு ஏற்படும் அனுபவ உலகை ஒருங்கிணைத்து (Synthesize) வெளிப்பாடு செய்யும் கலைஞனே வெறும் neurotic என்ற மனிதனிலிருந்து வேறுபட்டு, படைப்பாளன் என்ற தளத்தில் நிற்பவன் இந்நி லையை 'தன்னை அறிதல்' என்ற பழம்பெரும் இந்து தத்துவக் கோட்பாட்டுடன் சிலர் அடையாளம் காணக்கூடும். ஆனால் 'தன்னை அறிபவர்கள்' எல்லோரும் கலைஞர்கள் ஆகிவிடுவதில்லை. ஆத்மாநாம் 'மேலும் ஒரு நான்' கவிதையில்

நான் ஒரு ஞானியுமில்லை
நான் ஒரு சித்தனுமில்லை
பித்தம் பிடித்தும் பிடிக்காத மேதை நான்
படித்தும் படிக்காத புலவன் நான்
வைத்தியம் தெரிந்தும் செய்து கொள்ளாத நோயாளி நான்

என்றவாறு கூறுகிறார். தன்னையும் மீறி, வார்த்தைகளில் உருவம் கொண்டு விடுகிற கவிதைகளையே ஆத்மாநாம் (absurd Poems) என்கிறார். "மறுபரிசீலனை" "இழுப்பறைகள் கொண்ட மேஜை" போன்ற கவிதைகள் எடுத்துக்காட்டுகள்.

நகர வாழ்க்கையின் அவலத்தை, அல்லது இந்த நாட்டின் வாழ்நிலைத்தரத்தை விமர்சிக்கும் குறியீ டாகவே ஆத்மாநாமின் கவிதைகளில் பொதுக் கழிப்பிடங்கள் இடம் பெறுகின்றன. ஒரே சமயத்தில் பீதியையும், அருவருப்பையும் தரும் பெரு நகரங்களுக்கான குறியீடுகளாகவும் ஆகின்றன.

தீவிரக் குரலுடன் தொடங்கும் ஒரு கவிதையில் கிண்டலின் இடம் சரியாகப் பொருந்தாமல் போகும். ஆனால் ஆத்மாநாமிடம் அப்படி அல்ல. அவசர நிலைக்காலத்தில் எழுதப்பட்ட "எட்டி நடக்க கும் கைகள்" கவிதையின் வரிகள்

மூச்சை மெலிதாக இழுத்து விடுங்கள்
இங்கு எல்லாமே சரியாக உள்ளது

என வெளிப்பட்ட விதம் கவிதையின் high Seriousness-க்கு பாதகமாகவில்லை. சமூக விமர் சனம் செய்யும் கவிதைகளில் பல அங்கதத்துடன் நின்றுவிடுகின்றன. இத்தகைய கவிதைகளில் ஆத் மாநாமின் எழுத்து நேர்மையின் காரணமாக ஒரு force இருக்கிறது. இதன் கூடவே பெருங் கோபமும் கலந்து வருகிறது. 'எழுதுங்கள்' கவிதையில் தன் சக எழுத்தாளர்களுக்கு விடுக்கும் அழைப்பு ஆத் மாநாமின் கோபத்தை வெளிப்படுத்துகிறது. இக்கோபம் தன் சக எழுத்தாளர்களின், சூழல் பற்றிய பொறுப்பின்மையும், உணர்வின்மையும் உணர்ந்ததால் ஏற்பட்ட பொறுமையிழந்த கோபம்:

உலகப் பாராங்கல்லில் நசுங்கியவன் முனகலின்
தொலைதூர
எதிரொலி கூடக் கேட்கவில்லை
வார்த்தைகளின் சப்தங்கள்
அதற்குள்ளேயே மடிந்து விடுகின்றன
எழுதுங்கள்
பேனா முனையின் உரசலாவது கேட்கட்டும்
(எழுதுங்கள்)

மரணம் என்கிற விஷயத்தைப் பற்றி நிறைய கவிதைகளில் ஆத்மாநாம் பிரஸ்தாபித்த பொழுதும், அவரின் சமூகக் கவிதைகளிலும் சரி, தனிமனித அனுபவங்கள் சார்ந்த கவிதைகளிலும் சரி, நம்பிக்கையின்மைக்கு மத்தியிலும் ஒரு மெல்லிய கீற்றாக நம்பிக்கை துளிர்த்து நிற்கிறது. 'நாளை நமதே' என்ற கவிதை இதைச் சிறப்பாக நிரூபிக்கும்.

ஆத்மாநாம் எனும் கலைஞன், கவிதை என்ற துறையில் மட்டும் தன் ஈடுபாட்டை எல்லைப்படுத்திக் கொள்ளவில்லை. நவீன ஓவியர்களில் குறிப்பிடத் தகுந்தவரான திரு ஆதிமூலம், காலம் சென்ற கர்நாடக இசைக் கலைஞரான M.D. ராமநாதன் ஆகியோர் ஆத்மாநாமுக்கு நெருங்கிய நண்பர்களாக இருந்திருக்கின்றனர். இளம் ஓவியரான திரு. K. முரளிதரன் நெருங்கிப்பழகி, ஆத்மாநாமின் ஆளுமையை அறிந்து அதன் பிறகு ஆத்மாநாமின் "சில எதிர் கால நிஜங்கள்" தொகுதிக்கு (வெளிவராத தொகுப்பு) முகப்போவியம், உள் ஓவியங்கள் வரைந்திருக்கிறார். சிறந்த நட்பு முறையில் திரு அச்யுதன் கூடல்லூர் என்ற பிரதான asbtract ஓவியருடன் ஆத்மாநாம் தொடர்பு கொண்டிருக்கிறார். ஜ்யார்ஜ் ப்ராக் George Braque) என்ற க்யூபிச ஓவியரைப் பற்றிய ஆத்மாநாமின் கட்டுரை இனிமேல்தான் வெளியிடப்பட வேண்டும். அவர் ஒரு சிறந்த மனித நேயர் என்பதை "நன்றி நவிலல்" கவிதை மட்டுமன்றி அவருடன் பழகிய எல்லோருமே தம் மனதில் கொண்டிருக்கும் நன்றி நவிலல் மூலம் அறிவார்கள்.

— பிரம்மராஜன்.

## அழிவு

என்னை அழித்தாலும்
என் எழுத்தை அழிக்க இயலாது
என் எழுத்தை அழித்தாலும்
அதன் சப்தத்தை அழிக்க இயலாது
என் சப்தத்தை அழித்தாலும்
அதன் எதிரொலியை அழிக்க இயலாது
என் எதிரொலியை அழித்தாலும்
அதன் உலகத்தை அழிக்க இயலாது
என் உலகத்தை அழித்தாலும்
அதன் நட்சத்திரக் கூட்டங்களை அழிக்க இயலாது
என் நட்சத்திரக் கூட்டங்களை அழித்தாலும்
அதன் ஒழுங்கை அழிக்க இயலாது
என் ஒழுங்கை அழித்தாலும்
அதன் உள்ளழகை அழிக்க இயலாது
என் உள்ளழகை அழித்தாலும்
என்னை அழிக்க இயலாது
என்னை அழித்தாலும்
என்னை அழிக்க இயலாது
அழிப்பது இயல்பு
தோன்றுதல் இயற்கை

## என்றொரு அமைப்பு

இந்தப் பேனா  ஒரு ஓவியம் வரையக்கூடும்
ஒரு கட்டிட வரைபடத்தையும்
ஒரு சாலை விவரக் குறிப்பையும்
ஒரு பெண்ணுக்குக் காதல் கடிதத்தையும்
ஒரு அலுவலகத்தின் ஆணைகளையும்

இவை யாவும் இப்பொழுதைக்கு இல்லை
ஒரே ஒரு கவிதையை மட்டுமே எழுதும்
தலைப்பு தானே உருவாகும்
எலும்புகளைப் பற்றி ஆய்வு செய்தவனுக்கு
ஒன்று துல்லியமாய்த் தெரிந்தது
எலும்புகளும் நம்மைப் போலவே வாழ்கின்றன
வீடுகளில் பொட்டல்காடுகளில் வயல்வரப்புகளில்
அவைகளுக்கும்
அரசர்களும் மந்திரிகளும் போர்வீரர்களும்
என்றொரு அமைப்பு

## திருஷ்டி

பானைத்தலை சாய்த்து
புல் பிதுங்கும் கைகளோடு
சட்டைப் பொத்தான் வெடிக்க
தொப்பையில் புல் தெரிய தனியாய்
யாருன்னைத் தூக்கில் போட்டார்
சணற் கயிற்றால் கட்டிப் போட்டு
உன் காற்சட்டை தருவேன்
சென்றுன் எதிரியைத் தேடு

## மறு பரிசீலனை

நான் எதனையுமே மறுபரிசீலனைக்கே விட்டு விடுகிறேன்
நான் படித்த புத்தகங்கள் என்னைக் கேலி செய்கின்றன
நீ பழைய மனிதன்தான் என்கிறது ஒரு புத்தகம்
புதிய மனிதன் தான் என்கிறது இன்னொரு புத்தகம்
நான் மனிதன் தானு என்று சோதித்துக்கொள்ளும் நிர்ப்பந்தங்கள்
தொண்டையில் சிக்கிக் கொண்ட மீனின் முள்ளென
பச்சைப்புல்வெளியிடை சிக்கிக் கொண்ட கரும்பாம்பு
வெறுமனே சும்மா இருக்கமுடியாத பேனு
சிதறிப்பறக்கும் பிணந்தின்னிக் கழுகுகள்
எங்கோ கேட்கும் கூக்குரல்
துணிக்கயிற்றில் தொங்கும் குரல்வளைகள்
தூங்குபவர்களையும் தூங்குவது போல் நடிப்பவர்களையும்
எழுப்பும் வார்த்தைக் கூட்டங்கள்
புறப்பட்டாகிவிட்டது கருப்புப் படை

## ஒரு குதிரைச் சவாரி

நரம்பியலாளர் வாகனம் ஓட்ட
பின்னுல் நான் அமர
வாகனத்தின் சத்தம்
அவரை ஒன்றும் செய்யவில்லை
படபடத்துக் கொண்டிருக்கும்
மூளையின் மேல் நான்
சீராய்ச் சாலையில் செல்கிறது
அவர் ஓட்டம்
சிவப்பு நட்சத்திரங்களைக்
கடந்து வாகனத்தை நிறுத்தும் அவர்
சாலையிலேயே நான்
காப்பியை வேகமாய் உறிஞ்சுகிறுர்
நாஞே மெல்லத் துளித்துளியாக
வீட்டை அடைந்து விட்டோம்
படிக் கட்டுகளைத்
தாவிக் கடக்கிறுர்
படிக்கட்டுகளை
இன்னும் எண்ணிக் கொண்டிருக்கும் நான்

## கனவு

என்னுடைய கனவுகளே
உடனே அங்கீகரித்து விடுங்கள்
வாழ்ந்து விட்டுப் போனேன்
என்ற நிம்மதியாவது இருக்கும்
ஏன் இந்த ஒளிவு மறைவு விளையாட்டு
நம் முகங்கள்
நேருக்கு நேர்
நோக்கும் போது
ஒளி
பளிச்சிடுகிறது
நீங்கள் தான் அது
நான் பார்க்கிறேன்
உங்கள் வாழ்க்கையை
அதன் ஆபாசக் கடலுக்குள்
உங்களைத் தேடுவது
சிரமமாக இருக்கிறது
அழகில்
நீங்கள் இல்லவே இல்லை
உங்கள்கனவு உலகத்தைக் காண்கிறேன்
அந்தக் கோடிக் கணக்கான
ஆசைகளுள்
ஒன்றில் கூட நியாயம் இல்லை
தினந்தோறும் ஒரு கனவு
அக் கனவுக்குள் ஒரு கனவு
உங்களைத் தேடுவது சிரமமென்று
நான் ஒரு கனவு காணத் துவங்கினேன்
உடனே அங்கீகரித்து விடுங்கள்

## என் ரோஜாப் பதியன்கள்

என்னுடைய இரண்டு ரோஜாப்பதியன்களை
இன்றுமாலை சந்திக்கப் போகிறேன்
நான் வருவது அதற்குத் தெரியும்
மெலிதாய்க் காற்றில் அசையும் கிளைகள்
பரபரத்து என்னை வரவேற்கத் தயாராவது
எனக்குப் புரிகிறது
நான் மெல்லப் படியேறி வருகிறேன்
தோழமையுடன் அவை என்னைப் பார்க்கின்றன
புன்னகைத்து அறைக்குள் நுழைகிறேன்
செருப்பைக் கழற்றி முகம் கழுவி
பூத்துவாலையால் துடைத்துக் கொண்டு
கண்ணாடியால் எனைப்பார்த்து
வெளி வருகிறேன்
ஒரு குவளைத் தண்ணீரைக் கையிலேந்தி
என் ரோஜாப் பதியன்களுக்கு ஊற்றுகிறேன்
நான் ஊற்றும் நீரை விட
நான் தான் முக்கியமதற்கு
மெல்ல என்னைக் கேட்கின்றன
என்ன செய்தாய் இன்று என
உன்னைத்தான் நினைத்துக் கொண்டிருந்தேன் என
பொய் சொல்ல மனமின்றி
செய்த காரியங்களைச் சொன்னேன்
அதனை நினைத்துக் கொண்ட கணத்தைச் சொன்னேன்
சிரித்தபடி காலை பார்ப்போம்
போய்த் தூங்கு என்றன
மீண்டும் ஒரு முறை அவற்றைப் பார்த்தேன்
கதவைச் சாற்றி படுக்கையில் சாய்ந்தேன்
காலை வருவதை எண்ணியபடி

## ஏரி

புதிய தாய்த் தோன்றிக்
காத் திருந்தது ஒரு ஏரி
எனக் காய்

கூர்மையான பக்கங் களைக்கொண்ட
புற்கள் தாறுமா றாய்ச்
சிதறிக் காத்தன
ஏரியை
அதன் விளையாட்டு ஓரங் களில்

வானம் தன் முக அலங் காரம்
சிரத் தையாய்ச் செய்து கொண் டிருந்தது

தூக்கணாங்குருவிகள் போற்சில புட்கள்
இங்கு மங்கும் விரைந்து கொண் டிருந்தன

செங்கற்கள் ஆகாத சில மண் சதுரங்கள்
ரயில்களின் போக்குவரத்தை
வேடிக்கைப் பார்த்துக்கொண் டிருந்தன

ஏனோ நான் மட்டும்
கவிதை எழுதிக் கொண்டிருக்கிறேன்

## காரணம்

எதிர்த்து வரும்
அலைகளுடன் நான் பேசுவதில்லை
எனக்குத் தெரியும் அதன் குணம்
பேசாமல்
வழிவிட்டு ஒதுங்கிவிடுவேன்
நமக்கு ஏன் ஆபத்து என்று
மற்றொரு நாள்
அமைதியாய் இருக்கையில்
பலங்கொண்ட மட்டும்
வீசியெறிவேன் கற்பாறைகளை
அவைமிதந்து செல்லும்
எனக்குப் படகாக

## ஓவிய உலகம்

ஓவியம் உலகை அடக்கும்
உலகம் ஓவியத்தை அடக்கும்
ஓவியன் தன்னை அடக்கி
உலகை ஓவியத்துக்குள் ஒடுக்குவான்

உயிர் மூச்சை வண்ணக் கலவையாக்கி
செங்குருதி வியர்வை கலக்கி
ஒரு முகம்
ஒரு ஜாடி
ஒரு காட்சி

காம அவஸ்தைகள் மனப் போராட்டங்கள்
ஒடுக்கப்பட்ட உயிர்களின் ஓலோலம்
எல்லாம் ஒவ்வொன்றாய் சட்டமாகும்

உலகம் அடங்கி விட்டது
ஆர்ப்பரிக்கும் ஓவியன்
ஓவியம் தோற்றுவிட்டது
கூச்சலிடும் விமர்சகன்

தொடரும் போட்டியில்
முகம் புரியா முகங்கள்

## நினைவு

இருதயத்தின் நரம்புகளைத்
துண்டு துண்டாக்கி
எலும்புக் கூடுகளை
ஒன்றாய் அடுக்கி
சிதைக்குத் தீயிட்டுத்
திரும்பினேன்
திரும்பிப் பார்த்தேன்
ஒரு புகைப்படம்
கிழித்து எறிந்தேன்
மிச்சம் உள்ள நினைவுகளையெல்லாம்
கடலில் கரைத்து விட்டேன்
இனித் தெளிவென்று நினைத்து
கட்டிலில் கவிழ்ந்தேன்
நீ வந்தாய்
எல்லாமே புதிதாகத் தெரிந்தது
அங்கே
நானுமில்லை
நீயுமில்லை
இரண்டு நிழல்கள்
பேசிக் கொண்டிருக்கின்றன
அவற்றின் மெல்லிய குரலின்
கேஸட் பதிவே இது
அந்த மொழிக்கு
வார்த்தைகள் கிடையாது
தாறுமாறான வாக்கியங்களின்
ஒலிச்சிதறல்
எண்ணிக்கையற்ற எழுத்துக்கள் மட்டும்
எங்கிருந்தோ வந்து கொண்டேயிருக்கின்றன
நிச்சயம் இது எவுக
சிச்சிப்படியா
இங்கே கேஸட் நிறைவுறுகிறது
பக்கத்து அறையில்
செய்திகள் ஒலிக்கின்றன

## தலைப்புகள் தானே வரும்

நினைத்து
வெகு காலமாகிவிட்டது
போல் இருக்கிறது
உன்னை
எனக்குள் இருக்கும்
மூளைச் செதில்களைத் தின்றுவிட்டு
எங்கே பதுங்கி இருந்தாய்

எப்போதுமே நேரெதிராய்
புரிந்து கொள்ளும் சுபாவமெனக்கு
என்பதைத்
தெரிந்து கொண்டதாலா

குசலங்களை விட்டுவிட்டு
விஷயத்திற்கு வருவோம்

நாம் கடைசியாய்ச் சந்தித்த போது
இயக்கங்கள் பற்றி
பேசியதாய் நினைவு
இப்பொழுது தெரிகிறதா
இருப்பது ஒரே இயக்கம் என்று
சந்திப்போம்

நினைத்து
வெகுகாலமாகிவிட்டது
போல் இருக்கிறது

## ஸ்னேகம்

தரையோடு பறக்கும்
வண்ணத்திப் பூச்சிகள்
மண்ணுடன் ஸ்னேகம் கொள்கிறது
மண்
தீக்குழம்புடன் ஸ்னேகம் கொள்கிறது
தீக்குழம்பு
உயிரணுக்களுடன் ஸ்னேகம் கொள்கிறது
உயிரணுக்கள்
மண்ணுடன் காதல் கொள்கின்றன
மண்ணுடன் கலந்த உயிரணுக்களுடன்
மண்ணுடன் ஸ்னேகம் கொண்ட
வண்ணத்திப் பூச்சிகள்
உறவு கொள்கின்றன
வாழ்க்கை இனிமையாய்
வண்ணத்திப் பூச்சிகளுடன்
தாவிப் பறக்கின்றன
எந்தக் குறிப்பிட்ட திசையையும்
பின்பற்றாது
வண்ணத்திப் பூச்சிகள்
வாழ்க்கையை நடத்துகின்றன
எனினும்
எந்தத் தரையோடு பறக்கும்
வண்ணத்திப் பூச்சியின் திசையும்
பின்பற்றாது
வண்ணத்திப் பூச்சிகள்
வாழ்க்கையை நடத்துகின்றன
எனினும்
எந்தத் தரையோடு பறக்கும்
வண்ணத்திப் பூச்சியின் திசையும்
அதற்கு மட்டும் தெரிந்திருக்கிறது
நான் ஒரு வரியை
இயல்பாய்க் கொண்டு செல்கின்றேன்
அது நிச்சயமானதொரு திசையைத்
தேர்வு செய்கிறது
தரையோடு பறக்கும்
வண்ணத்திப் பூச்சிகள்
மண்ணுடன் ஸ்னேகம் கொள்கின்றன
நான் உங்களுடன் பேசுகிறேன்

## அவரவர் பாட்டுக்கு

எல்லோரும் அவரவர் பாட்டுக்கு
ஒன்றுக்கிருந்து கொண்டிருந்தார்கள்
நான் நுழைந்ததும்
அவையிலே அமைதி
நான் கேட்டேன்
ஏன் நிறுத்திவிட்டீர்கள்
அவரவர் போதனைக் கேற்ப
திரும்பிப் பார்த்தேன்
எல்லாம் உன்னால் தான்
உற்றுப் பார்த்தேன்
கேட்டது ஒரு குரல்
ஒன்றும் விளங்கவில்லை
குப்புற விழுந்து பார்த்தேன்
எல்லாம்
நின்ற நிலையிலேயே
அரங்கேறிக் கொண்டிருந்தது
தாவிக் குதித்தேன்
பாதாள சாக்கடை வறண்டிருந்தது
எங்கும் நில நடுக்கம்
மெல்ல எட்டிப் பார்த்தேன்
இரண்டு கையளவு
ஒற்றைச் சூரியகாந்திப்பூ

## இசை/ஒசை

வயலினில்
ஒரு நாணை
எனப் போடுங்கள்
அப்பொழுதேனும்
ஒலிக்கிறதா
எனப் பார்ப்போம்

அவ்வளவு துல்லியமாக
அவ்வளவு மெல்லியதாக
அவ்வளவு கூர்மையாக

எல்லா நாண்களுடனும்
ஒன்று சேர்ந்து
ஒலித்த படி

உள் ஆழத்தில்
ஒலியின்
ஆளரவமற்ற
இடத்தில்
மிக மிக மெலிதாய்
ஒரு எதிரொலி கேட்கிறது

கூர்ந்து கேட்டால்

அதே துல்லியம்
அதே மென்மை
அதே கூர்மை

## என்ற கேள்வி

பார் அந்த முதலை
அதன் பளிச்சிடும் ஒளியில்
ஒழுகுங்கள் சிறிது நேரம்
அதன் வர்ணங்கள் ஒவ்வொன்றும்
அதனதன் இடத்தில் உள்ளது
ஒரு மரம் என்றால்
அது பெயர்த்தெடுத்து வந்து
வைத்த மாதிரி இருக்க வேண்டும்
இங்கே
காலம் அகாலம் என்ற பேச்சே கிடையாது
நிஜம்
அதுதான் நமக்கு வேண்டும்
அதன் கற்பனைகள் வேண்டும்
வடிவங்களில் மாற்றமிருக்கலாம்
பொருளில் மாற்றம் கூடாது
முற்றும் முழுதான பொருள் வேண்டும்
இது சாத்தியமா
என்ற கேள்வி எழ வேண்டும்
பார்ப்பது நிஜம்தான்
என்று தோற்றம் அளிக்க வேண்டும்
அப்பொழுது
நீங்கள் பார்ப்பது ஓவியம்
எனினும் என்ற பிரச்சனைக்கே
அங்கு இடம் கிடையாது

# இழுப்பறைகள் கொண்ட மேஜை

அது உறுதியாகத் தரையில் இருப்பது போல்தான் படுகிறது
நான் பறந்து கொண்டும் தத்திக்கொண்டும் இருக்கிறேன்
எங்கிருந்தோ கிடைத்த புத்தகங்களையும் பொருட்களையும்
மேஜைமேல் அடுக்கிக்கொண்டே போகிறேன்
நானும் களைந்துகொண்டேயிருக்கிறேன்
குதித்துவிடுவான் ஒன்றுமேயில்லை என்ற ஆவலான குரல் கேட்கிறது
புத்தகங்களையும் பொருட்களையும் கொஞ்சம் கொஞ்சமாய் வீழ்த்துகிறேன்
சிரித்துக் கொண்டே தப்பித்துவிட்ட சிரிப்பொலி கேட்கிறது
உருவம் புலப்படுவதுபோல் இருக்கிறது
அடுத்து தான் விழவேண்டும்
துணிகள் ஏராளமாய்க் கொண்ட இழுப்பறை ஒரு பக்கம்
ஆவலான சிரிப்பொலி மறுபக்கம்
நான் வீழ்ந்தேன் நடுக்கடலுக்குள்
எழுந்தேன்

* ஜோஸப் ப்ராட்ஸ்கியின்when I Embraced these shoulders என்ற கவிதையின் மொழி பெயர்ப்பை ழ-19 (அக்-1981) இதழில் நான் வெளியிட்டிருந்தேன். 18வது வரியிலிருந்து இந்த தலைப்பை ஆத்மாநாம் உருவாக்கிக்கொண்டிருக்கிறார். இந்தக் கவிதை ழ-20 (பிப்-1982) இதழில் வெளிவந்தது.

## ஒரு கொடி ஒரு படகு...

கொடியொன்றைக் கொடுத்தார் ஒருவர்
சின்னக் காகிதத்தால் ஆனது
பாதி நீலம் பாதிபச்சை
நட்ட நடுவிலே ஒரு நட்சத்திரம்
அழகாய் இருந்தது
ஒன்றை ஸ்டாம்பு ஆல்பத்திலும்
இன்னொன்றைச் சட்டையிலும் குத்திக் கொண்டேன்
சந்தோஷமாய்க் கடற்கரையோரம் நடந்தேன்
மறுபுறக் கட்டிடம் ஒன்றிலிருந்து
ஒருவர் வந்தார்
என்ன கொடி இது ஏது இது வினாத்தொடுத்தார்
ஒருவர் கொடுத்தார்
அழகாய் இருந்தது
அணிந்து கொண்டேன் என்றேன்
யார் எனக்கேட்டுத் தொடர்பு கொண்டு
கொடியைப் பிடுங்கிக் கொண்டார்
சிலர் அருகில் வந்து
படகு ஒன்று தயாரித்துள்ளோம்
நீங்கள் வரவேண்டும் என்றனர்
கடலில் படகில் குழந்தைகள் தான்
செல்ல வேண்டும்
அதுதான் பொருத்தம் என்று கூறி
குழந்தைகளுக்கு மிட்டாய் தந்து
கையசைத்தேன்
வீட்டிற்கு வந்த பொழுது
உடன் செல்ல வேண்டிய நண்பர்
முன்னேமேயே புறப்பட்டு விட்டிருந்தார்
எங்கும் பழகிய முகங்கள்

# முத்தம்

முத்தம் கொடுங்கள்
பரபரத்து
நீங்கள்
முன்னேறிக் கொண்டிருக்கையில்
உங்கள் நண்பி வந்தாள்
எந்தத் தயக்கமும் இன்றி
இறுகக் கட்டித் தழுவி
இதமாக
தொடர்ந்து
நீண்டதாக
முத்தம் கொடுங்கள்
உங்களைப் பார்த்து
மற்றவர்களும்
அவரவர்
நண்பிகளுக்கு முத்தம் கொடுக்கட்டும்
விடுதலையின் சின்னம் முத்தம்
முத்தம் கொடுத்ததும்
மறந்து விட்டு
சங்கமமாகிவிடுவீர்கள்
பஸ் நிலையத்தில்
ரயிலடியில்
நூலகத்தில்
நெரிசற் பூங்காக்களில்
விற்பனை அங்காடிகளில்
வீடு சிறுத்து
நகர் பெருத்த
சந்தடி மிகுந்த தெருக்களில்
முத்தம் ஒன்றுதான் ஒரே வழி
கைவிடாதீர்கள் முத்தத்தை
உங்கள் அன்பைத் தெரிவிக்க
ஸாகஸத்தைத் தெரிவிக்க
இருக்கும் சில நொடிகளில்
உங்கள் இருப்பை நிரூபிக்க
முத்தத்தை விட
சிறந்ததோர் சாதனம்
கிடைப்பதரிது
ஆரம்பித்து விடுங்கள்
முத்த அலுவலை
இன்றே
இப்பொழுதே
இக்கணமே
உம் சீக்கிரம்
உங்கள் அடுத்த காதலி
காத்திருக்கிறாள்
முன்னேறுங்கள்
கிறிஸ்து பிறந்து
இரண்டாயிரம் வருடங்கள் கழித்து
இருபத்தியோராம் நூற்றாண்டை
நெருங்கிக் கொண்டிருக்கிறோம்
ஆபாச உடலசைவுகளை ஒழித்து
சுத்தமாக
முத்தம்
முத்தத்தோடு முத்தம்
என்று
முத்த சகாப்தத்தைத்
துவங்குங்கள்

## இடமொன்று வேண்டும்

இடமொன்று வேண்டும்
உட் காருவதற்கு
இந்த நகரம் எரிந்து
அஸ்தியான பின்
மூன்றும் கட்டத்திலோ
நான்காம் கட்டத்திலோ
மீண்டும் மக்கள் உயிர்த்துத்
தேடத் தொடங்குவர்
இடமொன்றை எங்கேனும்

ஒரு நாள் இதற்கு
மதிப்புண்டாகும்

உயிர்த்து பரபரப்புடன்
செயல் படும் இந்த இடம்
செயலிழந்து அழிந்து
மீண்டும் உயிர்த்துக் கொண்டிருக்கும்
இந்த இடம்
ஒன்றுக்கிருக்க மலம் கழிக்க
உட்கார்ந்து சாப்பிட
இடம் இல்லை என்றாலும்
வேண்டும் ஒரு இடம்
உட்காருவதற்கு
அப்போது
பற்றிக் கொண்ட நகரத்தின் தீ
நெருங்கி வரும்
புழுதிப்புயல் கிளம்பி
என்னை மூழ்கடிக்கும்
தணல் சூழ்ந்து வரினும்
எழ மாட்டேன்
கிடைக்குமா ஒரு இடம்
உட்காருவதற்கு
சரித்திரத்தின் புதைமணலில்
நான் அமிழ
காலக்கணக்கில்
உயிர் கிடைக்கும் எனக்கு
வழக்கம் போல்
இடமொன்று வேண்டும்
உட்காருவதற்கு

## உறைந்து போன நேரம்

நடையியல்
பயிலுமுன்
கிழி
பற
தூள்
தூள்
நூல்
குடி
விளக்கு வரிசை
சீப்பு
காகிதம்
ஓலோலம்
புராதான இசை
வழியும் மை
பஸ்ஸுக்குள்
ஊர்ந்து செல்லும்
மண் புழு
பேனா
சிகரெட்
காலம்
சென்றவரின்
புகைப்படம்
கிழிந்த ப்ளாஸ்டிக்
நகரச் சிதறல்கள்
கிழிந்த ட்ராயர்
நீளமான பை
தேவையான பணம்
பலப்பம்
ஷேவிங் சாமான்கள்
தூக்கு
எழுத்து
கொட்டகை
ஒற்றைக் கம்பளி
பட்டன்
உருண்டைப் பந்து
சூனியத்தில்
முற்றுப்புள்ளி

## சுதந்திரம்

எனது சுதந்திரம்
அரசாலோ தனிநபராலோ
பறிக்கப்படு மெனில்
அது என் சுதந்திரம் இல்லை
அவர்களின் சுதந்திரம் தான்

உனக்கொரு அறை
உனக்கொரு கட்டிலுண்டு
உனக்கொரு மேஜை உண்டு
உனக்குள்ளே ஒரே உரிமை
சிந்திப்பது மட்டும் தான்

மாற்றுணைத்தூண்டு முன்னெழுத்து
எப்படிச் சமூகம் அனுமதிக்கும்

மலைகளைப் பார்
மரங்களைப் பார்
பூச்செடிகளைப் பார்
இடையறாது ஓடும்
ஜீவ நதிகளைப் பார்
பரந்த கடலைப் பார்
இதமூட்டும்
கடற்கரையைப் பார்
எவ்வளவு இல்லை நீ பார்க்க

ஏன் அக்கசடர்களைக் குறித்து
வருந்துகிறாய்
குமுறுகிறாய்
எழுத்துக் கூட்டங்களைச் சேர்க்கிறாய்

உன் வேலை
உன் உணவு
உன் வேலைக்கு போய்வரச் சுதந்திர
இவற்றுக்கு மேல்
வேறென்ன வேண்டும்

சாப்பிடு தூங்கு மலங்கழி
வேலைக்குப் போ
உன் மீது ஆசை இருந்தால்
குறுக்கிடாதே

## நாளை நமதே

கண்களில் நீர் தளும்ப இதைச் சொல்கிறேன்
இருபதாம் நூற்றாண்டு செத்துவிட்டது
சிந்தனையாளர் சிறு குழுக்களாயினர்
கொள்கைகளை
கோஷ வெறியேற்றி
ஊர்வலம் வந்தனர் தலைவர்கள்
மனச் சீரழிவே கலையாகத் துவங்கிற்று
மெல்லக் கொல்லும் நஞ்சை
ஊணவாய் புசித்தனர்
எளிய மக்கள்
புரட்சி போராட்டம்
எனும் வார்த்தைகளினின்று
அந்நியமாயினர்
இருப்பை உணராது
இறப்புக்காய்த் தவம் புரிகின்றனர்
என் ஸக மனிதர்கள்
இந்தத் துக்கத்திலும்
என் நம்பிக்கை
நாளை நமதே

## குட்டி இளவரசிக்கு ஒரு கடிதம்

ஹலோ என்ன சௌக்கியமா
இப்பொழுது புதிதாக என்ன விளையாட்டுக் கண்டுபிடித்துள்ளாய்
உன்னுடைய Scamp எப்படி இருக்கிறது
பூச்செடிகளுக்கிடையே
புல்தரைகளின் மேல்
நெடிய பசும் மரங்களின் கீழ்
சுற்றிலும் வண்ணத்திப்பூச்சி
மரச்சுவர்களுக்கிடையே
சிவப்பு வீட்டின் உள்ளேயிருந்து
Scamp எட்டிப் பார்க்கிறான்
வெளியே பழுப்புநாய் இருந்தான்
என்ன விஷயமென்று Scamp வெளியே வந்தான்
தெரியாதா நம்முடைய கூட்டம் மரத்தடியில்
சீக்கிரம் வந்துவிடு என்றான்
பலவர்ண நாய்களுக்கிடையே தாவி நுழைந்தான்
கேட்டது ஒரு கேள்வி
எங்கள் தலைவனை கௌரவிக்க
நாமெல்லோரும் கூடியிருக்கிறோம்
அவர் கண்டுபிடித்ததென்ன
அடக்கத்துடன் Scamp சொன்னான்
பின்னால் சுமக்கும் பை
கூட்டம் கலைந்தது
அடுத்த கதையை நீ சொல்
அன்புடன் என்றும் உன்

## பூச்சுக்கள்

வாழ்க்கைக் கண்ணுடியில்
முகம் பார்த்து
தலை சீவி
பவுடர் பூசி
வெளிக்கிளம்பினேன்
பஸ் ஸ்டாண்டில்
என்னைப் போலவே
ஆண்களும், பெண்களும்
அவரவர் வாழ்க்கைக் கண்ணுடியில்
முகம் பார்த்து
அலங்கரித்து
காத்து நின்றிருந்தனர்
வந்து போய்க்கொண்டிருந்த
வாகனங்களில்
பொது மக்கள்
வேற்றுமை காண இயலா வண்ணம்
உட் கார்ந்து கொண்டும்
நின்று கொண்டும்
பயணம் செய்து கொண்டிருந்தனர்
என்னுடைய வாகனம் வந்து விட்டது
இடிபாடுகளுக்கிடையே
நானும்
ஒரு கம்பியில் தொற்றிக் கொண்டேன்
எங்கோ ஒரு இடத்தில்
நிலம் தகர்ந்து
கடல் கொந்தளித்தது
ஒரு பூ கீழே தவழ்ந்தது

## நான்

இருபத்தி இரண்டு ஆண்டுகள்
படிப்பு வேலை தொழில்
எல்லாம் பார்த்தாகிவிட்டது
சந்தித்த முகங்கள்
மறக்கத் துவங்கியாயிற்று
என் தாய் இப்பொழுது விதவை
வானொலிப் பெட்டிகள் மாற்றப்பட்டு
வானொளிப் பெட்டிகள் வந்து விட்டன
கோடிக்கணக்கான வார்த்தைகள் சேர்ந்து
எங்கும் கவிதைகளாய்த் தெரிகின்றன
பழைய புதிய இலக்கியங்கள்
வெளிவந்த வண்ணமிருக்கின்றன
கட்சிகள் உடைந்து
ஏராளமாய்ப் புதிய கட்சிகள்
தோன்றியுள்ளன
ஏராளமான தலைவர்கள் இறந்துள்ளனர்
புதிய புதிய தலைவர்கள் உருவாகி வருகின்றனர்
தெருக்களின் பெயர்கள் மாறி வருகின்றன
புதிய நகர்ப்புறங்கள் உருவாகியுள்ளன
விஞ்ஞானத்தில்
மெய்ஞ்ஞானத்தில்
ஏராளமான சாதனைகள் நிகழ்கின்றன
பல போர்களை
உலகெங்கும் பார்த்தாகிவிட்டது
இதோ உலகப்போர்
இதோ உலகப்போர்
என்ற அச்சம் பலமுறை வந்துவிட்டது
இனி போரே இல்லை
இரு பக்கமும் சமம்
என்ற குரலும் பழகி விட்டது
அணுப் போருக்குப் பின்
புதிய சமுதாயம் தான்
என்றும் அச்சுறுத்தியாகிவிட்டது
இருந்தும்
இன்னும் ஒரு முறை கூட
அண்டை வீட்டானுடன் பேசியதில்லை

## உன் நினைவுகள்

எனினும் நான்
உற்றுப் பார்த்தேன்
கூர் வைரக்கற்கள்
சிதறும் ஒளிக் கற்றைகளை
வீசும் விளக்கை

அப் பொழுதேனும்
துடிக்கும் மனத்தின்
பிணைப்பினின்று மீள

முடியாது இவ்விதம்
தொடர்ந்திருக்க முடியாது என்று
நிற்கும் தரையின்
பரிமாணங்களைச் செதுக்கிய
ஓவியத்திற்குச் செல்வேன்
பழகிவிட்ட ஓவியமும்
கை விடும்

உதிர முடியாத
காகிதப் பூக்கள்
வண்ணம் இழக்கும்

மெல்லிய ஒலியுடன்
நாடி நரம்புகளைத்
தொற்றிக் கொண்டு
சிறிது நேரம்
மூச்சளிக்கும் இசை

எழுத்துக் கூட்டங்களுக்கும்
தொடர்வேன்
ஏதேனும் ஒரு மூலையில்
உன் நினைவுகள்

என் அறையில்
நான் முடங்கிக்கிடக்கையில்
எப்பொழுதேனும்
அந்த உயிரிழந்த பஸ்ஸரை
அழுத்திச் சென்று விட்டாயோ
என்று மன மதிரும்

பின்னர்
உயிர்த்திருக்கும் புட்களுடன்
தேடிக் கொண்டிருப்பேன்
அலையும் நினைவுகளில்

## எங்கோ

எங்கோ பார்த்த முகம்
எங்கோ பார்த்த கண்கள்
எங்கோ கேட்ட ஒலி
எல்லாம் எங்கோ
எங்கெங்கோ

வேறு யாருமில்லை
நான் தான்

எனக்கும் உங்களுக்கும் இடையில்
பல்லாயிரம் வருடம் வேறுபாடு

முன்பென்றால் நினைவு
பின்பென்றால் கனவு
இப்பொழுதென்றால் நான்

உங்கள்
நினைவுகளையும் கனவுகளையும்
களைந்து
இப்பொழுது
உங்களெதிரில் நிற்கும்
என்னைப் பாருங்கள்
அப்பொழுது
காலம் மறைந்து
நானும்
என்னெதிர்
நீங்களும்
மட்டுமே
இருப்போம்
உதிரும் மலரின்
கணிதத்தை
என்றாவது
நீங்கள் யோசித்திருந்தால்
மட்டும்
இது புரியும்
இல்லை
என்னோடு எப்போதும்
உறவாடும்
பாறையைக் கேளுங்கள்

## நான்கு கவிதைகள்

I. அணுவுக்கு எதிராய்
மக்கள் கிளர்ச்சி
அணு உலையிலிருந்து
சிதறி விட்டது
அணுத்துகள் ஒன்று
கலவர மக்கள்
கூக்குரலிடுகின்றனர்
வானிலிருந்தும் நீரிலிருந்தும்
வினோத வாகனங்களைக் கொண்டு
ஆராய்கின்றனர்
சுற்றுப்புறத்திலிருந்து
வெளியேற வேண்டும்
உள் உலகிலிருந்து வெளி உலகிற்குத்
தப்பிக்க வேண்டும்
மீண்டும் மனிதம் அடிமையாயிற்று
அதன் கண்டு பிடிப்பிற்கு

II. எனக்குள் என்னில் என்னைய் விரிந்து
உள் அமிழ்ந்தேன்
கற்பனை நிஜம்
காலம் ஒளி
ஒலி பயணம்
உருவம் உள்ளடக்கம்
எல்லா இடங்களிலும் தேடினேன்

தெரிந்தும் தெரியாமல்
விரிந்தும் விரியாமல்
இருந்தும் இல்லாமல்

ஆன் ஏன்

III. அற்புதமாய் புலர்ந்த காலை
நீள நிழல்கள்
நிலத்தில் கோலமிட
வண்ணக்கலவையாய் உலகம்
எங்கும் விரிந்து
கெட்டியாய் தரை
என் காலடியில்
நிஜம் புதைந்து கிடக்க

IV ஒரு தலைப்பிடாத கவிதையாய்
வாழ்க்கை
ஒரு நாள் இரண்டு நாள் என
தொடர்ந்த நாட்களை எண்ணினேன்
காலையைத் தொடர்ந்து மாலை
இரவாகும் காலப்புணர்ச்சியில்
பிரமித்து நின்றேன்

கடற்கரையில்

## அலைவுகள்

அகாலத்தில்
தோன்றியவனோ என்று
சில வேளை தோன்றுகிறது

டீக்கடைப் பெஞ்சின் மேல்
உட்காருகையில்
அதன் மேலிருக்கும்
கை கால்களைப் பார்த்து
அதன் மூதாதையர்
நினைவெனக்கு வருகிறது

கட்டிடக் கண்ணாடியின்
பிம்பத்தைப் பார்த்து
எதிரிலிருக்கும் ஒளி தெரிகிறது

எவனோ ஒருவன்
விலை உயர்வைப் பற்றி
புலம்பிக் கொண்டேயிருக்கிறான்

காக்கையின் கரியைத்
தின்றிருக்கும் மக்கள்
தங்களின் தலைவன்
பிறந்த நாளில் ஆரவாரிக்கிறார்கள்

இன்னும் அகரத்தைத் தொடுமுன்பே
நிழல் பொசுக்கி அழுத்திடுகிறது
பண்டைய காலம் இன்றைய காலத்துடன்
இணையும் இடைவேளையில்

## திரும்புதல்

சரக்கென்று
உடல்விரித்துக்
காட்டும்
கற்றுழையின்
நுனியிலிருந்து
துவங்கிற்று வானம்

எங்கெங்கோ
அலைந்து திரிந்து
திரும்பிற்று மனம்

வழக்கம் போல்

கடல் மணல் புல்தரை
சாலை வாகனங்கள்
கோணல் மாணல் மனிதர்கள்
திரும்பிக் கொண்டு
எங்கிருந்து
கப்பல்கள் காத்திருக்கின்றன
திரும்பிச் செல்ல

நானும் திரும்ப வேண்டும்
தினசரியைப் போல
ஒவ்வொரு நொடியாக
அடுத்த நாள் காலை வரை

## மனத்தின் கவிதைகள்

1. கழிவறையின் விட்டத்தைப் பார்த்தான்
தூக்கில் அவன் தொங்கப் போவதில்லை
எனினும் பார்த்தான்

2. பேருந்து கம்பிக்கு வெளியே அவன் கை
பிய்த்துக் கொண்டு விழுந்தன விரல்கள்
சிலிர்த்து விரல்களைச் சேகரித்து
தொடர்ந்தான் மேலும் அவன் பயணம்

3. கூட்டம் காத்துக் கொண்டிருந்தது
அவரும் ஆரம்பித்து விட்டார்
காமிராக்கள் இயங்கிக் கொண்டிருந்தன
திடீரென இயந்திரத் துப்பாக்கி
நின்று விட்டது உலகம் ஒரு கணம்
அவனைச் சுற்றி ஒரு கூட்டம்
அவரைச் சுற்றி ஒரு கூட்டம்
அவனுக்குள் தொடர்ந்து ஒரு கணம்
கூட்டம் முடிந்து அவரைச் சுற்றி ஒரு கூட்டம்

4. கடலலைகள் ஓய்வின்றி ஓய்ந்து கொண்டிருந்தன
அவனைச் சுற்றி கொஞ்சம்கொஞ்சமாய் மீன்கள் கடிக்கத்
துவங்கின
தூர நின்று பார்க்க மட்டும் முடிந்தது

5. குழந்தை அழ ஆரம்பித்தது
உறவுகள் நகைப்புக்குரியதாயிருந்தன

## இப்பொழுதெல்லாம்

நன்றாகத்தான் இருக்கிறது
மெத்தென்ற புல்தரை
சில பறவைகள்
மீண்டும் மீண்டும்
எனைத் தேடி வருகின்றன
ஒரு மாற்றத்திற்காய்
நானோ
அவற்றின் வண்ணத்திலும்
சிறகடுக்குகளின் அழகிலும்
அமிழ்ந்து போகிறேன்
கண் விழிக்கையில்
நான் மட்டுமே இருக்கிறேன்
இப்பொழுதெல்லாம்
பறவைகளைத் தேடுகிறேன்
ஒரு மாற்றத்திற்காய்

## தும்பி

எனது ஹெலிகாப்டர்களைப்
பறக்க விட்டேன்
எங்கும் தும்பிகள்
எனது தும்பிகளைப்
பறக்க விட்டேன்
எங்கும் வெடி குண்டு விமானங்கள்
எனது வெடிகுண்டு விமானங்களைப்
பறக்க விட்டேன்
எங்கும் அமைதி
எனது அமைதியைப்
பறக்க விட்டேன்
எங்கும் தாங்கவொண்ணா விபரீதம்

# இல்லாத தலைப்பு

நான் இருக்கிறேன்

நான் இருக்கிறேன்
என்பது தெரியாமலே
இருக்கிறேன்

நான் இருப்பதைத்
தெரிந்து கொண்ட போது
நானும் நானும் இருந்தோம்

உண்மையான நானும்
உண்மை போன்ற நானும்
பேசிப்பேசி
உண்மை போன்ற நானை
நானாகி விட்டேன்

உண்மையான நான்
அவ்வப்போது ஆவேன்
உண்மை போன்ற நான்
மறைந்திருக்கையில்

உண்மைபோன்ற நான்
இல்லவே இல்லை என்று
உண்மையான நான் சொல்லும்

சரி என்று
உண்மை போன்ற நான்
ஆமோதிக்கும்

இதனைக் கவனித்த நான்
உண்மையான நானும் இல்லை
உண்மை போன்ற நானும் இல்லை
நான் மட்டும் இருக்கிறேன்
என்றுணர்ந்தேன்

நான் மட்டும் இருக்கையில்
அமைதியாய் இருந்தது

அமைதியாய் இருப்பதை
உணர்ந்ததும்
நான் வேறு ஆகி விட்டேன்

நானும் வேறான நானும் பொய்

நான் இல்லை

## நிகழா நிகழ்வு

தனியொன்றாய்த்
திரண்டெழுந்தது
ஒற்றை மேகம் எனக்குள்
கனவுகள் கலைய
மீண்டும் ஒரு முறை
எழுந்தேன்
இசைத்தது ஒரு நினைவு
துவங் கிற்று ஒரு நடனம்
அரங் கேறிற்று ஒரு நாடகம்
சிலைத்தது ஒரு நிகழ்வு
இருப்பிடத்தில் நகர்ந்தது
ஒரு கணம்

தனியொன்றாய்த்
திரண்டெழுந்தது
ஒற்றை மேகம் எனக்குள்

## ஒரு கவிதை எனும் ஒரு கவிதை

என் கையெழுத்தை இழந்த ஒருநாள்
போலியாய் என் மனம் காலியானது
சுற்றிலுமிருந்த வெட்டவெளிச்சம்
எனை ஆட்கொண்டது

ஒருவரும் அனுதாபத்துடன் நுணுகவில்லை
காலை மாலை இரவு எல்லாம் நன்கு தெரிந்தன

ஒரே பாதையில் சுழலத்துவங்கினேன்
எல்லையற்ற பெருவெளியில் போலி மனம்

அவ்வப்போது சில முட்டைகள் உடைந்தன
என்னளவில் ஆகாயம் எனக்குள்

ஊஞ்சலில் திருகாணியாய் வலம் வந்து
சுமந்தேன் விட்டத்தைக் கால்மேல்

## களைதல்

என்னைக் களைந்தேன்
என் உடல் இருந்தது
என் உடலைக் களைந்தேன்
நான் இருந்தது
நானைக் களைந்தேன்
வெற்றிடத்துச்
சூனிய வெளி இருந்தது
சூனிய வெளியைக் களைந்தேன்
ஒன்றுமே இல்லை

## சுழற்சி

மீன்களின் கண்கள்
நடுச் சாலையில்
கொட்டிக்கிடக்கின்றன
சூரியனின் கூர் கதிர்கள்
நாற்புறமும் சிதறுகின்றன
முற்றிய திராட்சைகளின்
மிருதுத் தன்மை
நோயுற்ற மூதாட்டி
ரிக்ஷாவில் செல்லப்படுகிறாள்
ஹூங்கார ரயில் வருகிறது
எனக்காக

## மௌனம்

ஒரு புதிய அலை
எனக்குள் எழுந்தது
நான் பேசும்
ஒவ்வொரு எழுத்துடனும்
அதன் உறுதியைக் கோர்த்தது

சொற்கள்
அதன் ஆழத்தை நோக்கிப்
பாய்ந்து கொண்டிருந்தது
வாக்கியங்கள்
ஓசையுடன் ரீங்கரித்தது

பொருள் உருவாக்கம் கொண்டது
கேள்விகள் கேட்கப்படாமலேயே
பதில்கள் வெளியாயின
மௌனம் ஆன் ஏன்

## தலைப்பு:
## வசதிக்காய்த் தெரு விளக்குகள்

தூரத் தெருவிளக்குகள்
இரவில் இரும்பு மனிதர்கள் ஆகின்றன
கையில் நிழற் சுமையுடன்
இரவைக் காவல் காக்கின்றன
பகலிடமிருந்து

காலை மெல்லப் புலர்கிறது
கொஞ்சம் கொஞ்சமாய்
தெரு விளக்குகள் இறந்து விடுகின்றன
கண்ணுக்கே தெரியாத்தொலைவு சென்று விடுகின்றன

மீண்டும் இரவு
மெல்ல மெல்ல வருகிறது
வெளிச்சத்தை விரட்டிக்கொண்டு
மீண்டும் எங்கிருந்தோ
வந்து குதிக்கின்றன
தெரு விளக்குகள் இரவைப் பாதுகாக்க

## ஒரு கற்பனைக் கவிதை

கற்பனையிலேயே செத்துபோ என்றது மனம்
நானும் செத்துப் போனேன்
கற்பனை உலகில் உயிர் வாழ்ந்தேன்
எல்லோரும் சந்தோஷமாய் இருந்தார்கள்
நானும் என் நண்பர்களும் கூட
அற்புதமான ஓவியங்களைப் பார்த்தேன்
நெஞ்சின் ஆழத்திலிருந்து
துவங்கிய இசையைக் கேட்டேன்
உன்னதமான கலை இலக்கிய வடிவங்களை
தரிசித்தேன்
உண்மையான கவிதைகளை எழுதினேன் படித்தேன்
முழுமையான இதழ் ஒன்றை நடத்தினேன்
ஒரு நாள் என் சாய்வு நாற்காலியில்
அமர்ந்து கொண்டிருக்கும் பொழுது
என் மனம் கேட்டது
எப்படி இருக்கிறாய் என்று
நன்றாய் இருக்கிறேன்
பசிதான் தீரவில்லை என்றேன்

## குட்டி இளவரசி வந்து விட்டாள்

டப்பியின் க்ளிப்புகளை பரப்பி வைப்பாள்
சுவற்று அழுக்கை ஈயெனப் பிடிப்பாள்
கூக்கூவை தினம்தினமும் புதிதாய்க் காண்பாள்
மக்கள் கூட்டத்தில் கூக்குரலிடுவாள்
ஏறி இறங்கும் படிகள் அவள் உலகம்
பார்த்தவரெல்லாம் அவளது தோழர்கள்
பசி உடல் தவிர அழ ஒன்றும் இல்லை
தனக்குள் தானே பொங்கும் மகிழ்ச்சி அவள்
ஒவ்வொரு கணமும் மகிழ்ச்சியின் தொடர்ச்சியே
பெயர் சொல்லி அழைத்தால் திரும்பிப் பார்ப்பாள்
அவள் ஊடுருவல் பார்வை உம்மையும் மீறிச் செல்லும்

## மண் புழுக்கள்

ஊமத்தம் பூக்களாய் நாறிக்கிடந்தோம்
வேலிச் சருகுகளாய் வாடிக்கிடந்தோம்
எருக்கம் பூக்களாய் வடிந்து கிடந்தோம்
செவ்வரளிப் பூக்களாய் சினந்து கிடந்தோம்

எங்கள் வண்ணங்களை வரைந்தீர்கள்

நிலம் பதியா எம்மைக் காணுங்கள்
வெளிப்புறமும்
உட்புறமும்
எங்களுக்குத் தெரியாது

தெரிவியுங்கள்
நாங்கள்
உலகின் மண்புழுக்கள் என

## செய் அல்லது செத்து மடி

என்னைத் தனிமைப் படுத்த இயலும்
தேவையின்றி எனக்காய்
புதிய எஜமானர்களைத் தோற்றுவிக்க இயலும்
எனக்கு மட்டும்
மூன்று வேளை
உணவு உத்தரவாதப்படுத்த முடியும்
உலகமே காசை உண்கையில்
நான் மட்டும் எவ்விதம் வேறாக முடியும்
வேலையைச் செய்
வைப்புநிதி சேர்
இசை நாட்டியம் நாடகம் இலக்கியம்
எல்லாம் உன் பொழுது போக்கு
உண்மை
ஆயினும்
என் பேனா
என் காகிதம்
என் கவிதை

## வேலி

வேலி
பொலிவிழந்து
இருந்தும் இல்லாமல்
இருந்தது

வேலியைத் தாண்டியோர் பலர்
வேலியைக்கிறி உள் நுழைந்தோர் பலர்
ஆடுகளுக்கும் மாடுகளுக்கும்
வேலி ஒரு லட்சியமே இல்லை

ஒரு நாள் காலை
வேலியைக் கழற்றிச் சுருக்கியாயிற்று

மரங்களும் புற்கூட்டமும் தழைகளும்
நிஸ்சிந்தையாய் இருந்தன

கண்ணெதிரே தோன்றி
விறைத்திருந்தது ஒரு வேலி

## குளிர்க்கண்ணாடிகள்

குளிர்க் கண்ணாடிகளை
அணிந்து கொண்டேன்
சாயம் பூசப்பட்ட உலகம்
ஒரு விதத்தில் அழகாகவே இருந்தது
சாயம் பூசப்பட்ட மனிதர்கள்
என் கண்களை உற்றுப் பார்த்தனர்
ஒருவன் என்னைக் கேட்டான்
ஏன் இந்தக் கண்ணாடி
ஆயிரம் காரணங்களை
நான் கூற எத்தனித்தேன்
உண்மையை அவன் நம்பவேயில்லை
கண்ணாடியைக் கழற்றி வைத்தேன்
உலகம்
ஒரு விதத்தில் அழகாகவே இருந்தது

## கண்டிப்பாக

விற்பனை
ஒரு அழைப்பு
நீங்கள்
ஏதாவது ஒரு இடத்திலாவது
வாங்கியாக வேண்டும்
மனைவியை
பிள்ளைகளை
இத்துடனில்லாது
கடைகளில் ஏதாவது
இன்றைக்கு
இலக்கியம் ஒரு பொருள்
அது உயிரல்லாதது
உயிருள்ள இலக்கியம்
இன்றைக்கு
மௌனமாய்ப் பேசிக்கொண்டிருக்கின்றது
நீங்கள்
ஏதாவது ஒன்றை சொல்லியாக வேண்டும்

## காக வேதம்

எழும்பும் நற்காக்கைக் கூட்டம்
சிற்சில வேர்க்கடலைக்காக
நோயுற்ற மனிதரெல்லாம்
தங்களைத் தேற்றிக் கொண்டார்

எழும்பிடும் மேலே தாவும்
அணியணியாய்
கடற்காற்றின் உப்பொடு
காத்திருக்கும்
இன்னும் சில பருக்கைக்காக

கடைசியாய்ப் பறந்த காக்கை
உரத்துச் சொல்கிறது
தான் ஒரு காக்கை என்று

## பதில்

குற்றுகர முற்றுகரச் சந்திகளை
சீர்சீர் ஆய்ப் பிரித்து
தளை தளையாய் அடித்து
ஒரு ஒற்றை வைத்து
சுற்றிச் சுற்றி வந்து
எங்கும் மை நிரப்பி
எழுத்துக்களை உருவாக்கி
பொருளைச் சேர்த்து
வார்த்தைகள் ஆய்ச் செய்து
ஒவ்வொரு வாக்கியத்திற்கும்
கமா மற்றும் முற்றுப்புள்ளி வைத்து
ஏதாவது சொல்லியாக வேண்டும்
நமக்கேன் வம்பு

## தான் தான்

தான்தான்
முதலில் ஒளிக்கீற்றுக்காய்
பிறந்ததாய்
போரிடத்துவங்கிற்று
கும்மிருட்டில்
ஒவ்வொரு கண்ணும்
இன்னொரு கண்ணைத்
தேட ஆரம்பித்தது
எப்படியும்
ஒரு மந்திர ஒளிக்கீற்றில்
ஒரு கண் துலங்கும் என
அண்டப் பெரு வெளியில்
எக்கண்ணுக்கும் படாமல்
மாயமாய் மறைந்தது
ஒளிக்கீற்று

## மஹா ஜனம்

மேலும் கீழும் மெல்லிய உதடுகள்
பற்களை உள்ளே மறைக்கும் வாய்கள்
காற்றைச் சுரண்ட முட்டும் மூக்குகள்
முழிக்கும் கண்கள் மேலே நெற்றிகள்
கோரை முடிகள் கட்டாந்தலைகள்
இருளும் ஒளியும் இல்லா வெளியில்
அகன்ற பரப்பில் லட்சம் தலைகள்
கண்கள் மேய்ந்து கண்கள் மேய்ந்து
அலுப்பில் திரும்ப மீண்டும் தலைகள்
கனவில் தெரியும் நினைவில் தெரியும்
எழுத்தில் வழிந்து தெருவில் நகரும்

## மேகம்

வெற்றிடத்தில் பிடிப்பின்றி
மின்னலின் கீறலுக்கும்
இடியின் இறுமலுக்கும்
இடையே தவிப்புற்று......
இறுக்கத்தின் வெம்மையால்
காய்ந்த நிலம் நோக்கிக்
கண்ணீராய்க் கவிழ்ந்தது
உருமாறி......

## ஸ்திதி

கைகள் முகங்களாய்
மரங்கள்
அரக்கர்களாய்
தம்மைக் காட்டும் வேசிகளாய்
ராத்திரி நாய்களுக்கு
நம்மைக் கண்டால் கொண்டாட்டம்
நிழல்கள் நம்முடன்
பேசும் நேரத்தில்
நாமிருக்க மாட்டோம்
குடிசைகளில்
சுதந்திரக் கொடிகள்
கோவணமாய்ப் பறக்கின்றன
சைக்கிள் கம்பிகள் மட்டும்
ஒன்றையொன்று நேசிக்கின்றன

## உன்னுள் நிறையும் உலகம்

புதியதாய்
ஒவ்வொன்றும்
அக்கணத்தின்
உண்மைகள் கொண்டதாய்
உள்ள
உலகை நீ காணட்டும்
அதன்
ஆழ்ந்த இசையில்
மயங்கி நிற்கட்டும்

## சூழல் *

விறைகளென விறைத் திருந்த மரங்கள்
வான் நோக்கி
எம்மைப் பின் தொடரும்
தொடரும் சாட்சிகளாய்

எமக்காகக் காத்திருந்தது ஏரி தனிமையில் தனிமையில்.....
பாறைகள் எம்முடன் உரையாடிக் கொண்டிருந்தன
உங்களுடனும்
மொழியில்லா மொழியில்

இவ்வேரியின் சலனம் எம்முடையதோ உங்களுடையதோ
அல்ல இவ்வேரியின் சலனம் தான்

நாம் ஏன் ஏரிகளாய் இருக்கக்கூடாது

சலனமற்று வான் நோக்கி பாறைகளுடன் பேசிக்கொண்டு

---

* 1982 ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம், ஆத்மாநாம் ஊட்டியில் தங்கியிருந்தபோது இந்தக் கவிதை compose செய்யப்பட்டது. ஊட்டியின் வெளிப்புறப்பகுதியில் அமைந்துள்ள Golf Links க்குப் பக்கத்தில் உள்ள ஏரிக்கு ஒரு நிலா ஒளி இரவில் சென்றபோது இந்தக்கவிதையை ஆத்மாநாம் சொல்ல நான்கு பேர்கள் நினைவில் வைத்திருந்து மறுநாள் காகிதத்தில் எழுதினோம். நினைவில் வைத்திருந்தவர்கள்: நான், என் மனைவி ராஜலஷ்மி, மறைந்த மணிக்கண்ணன், ஆத்மாநாம்.

# மூன்று கவிதைகள்

1. முத்தைப் பறிகொடுத்துக் கதறும்
சிப்பியின் ஓலம்
கடற்கரையில்
தூண்டில் மீன்களுக்கு
உண்டு ஒரு கூடை
என்றும் நிரந்தரம்

2. எதிர்காலம்
துள்ளிக் குதித்து வரும்
பள்ளி வாசலில்
அற்ப அறிவை
ஒதுக்கித் தள்ளிப் பார்த்தேன்
உலகம் அழகானது
காற்ருய் மரமாய்
செடியில் மலராய்
என்னை ஆட்கொண்டது
இப்பரந்த உலகின்
தூசி முனையில்
நின்று கொண்டு பார்த்தேன்
உலகம் அழகானது

3. மதியச் சூட்டில்
இறப்புச் செய்திகள்
வெறுமையைப் பறிக்கும்
வெற்று வெளியைப் பார்த்துக் கொண்டு
எங்கோ இயங்கும்
இயந்திர ஒலிகளின் மயக்கத்தில்
போதையுற்று நகர்கையில்
ஒரு கணம் நெஞ்சம் கனக்கும்
கைப்பிடிக்குள் சிக்கிய மணல் போல்
அலைகடல் ஆர்ப்பரிக்கும்
கலகத்துப் பின்வாங்கும்
எங்கோ சில பறவைகள் கூடுகட்டும்

## சாலை

சாலையைப் பாரடா நெடுஞ்
சாலையைப் பாரடா
உன் கவலைகளை
அழகுடன் பகிர்ந்து கொள்ளும்
இருபக்கச் சாலை
மரங்களைப் பார்
அரசாங்கம்
அவற்றைத்
தனது சொந்த மரங்களாக்கியிருக்கலாம்
ஆயினும் அவை
உன்னுடன் தான் உறவாடுகின்றன
இரும்புக் கழிவுகளைக் கொண்டு செல்லும்
லாரியைப் பார்
வைக்கோல்போரைக் கொண்டு செல்லும்
காளை வண்டியைப் பார்
நடுநடுவே
மனிதர் வாழும் இடங்களிலுள்ள
பெருந்தலைவர்களின் சிலையைப் பார்
நின்றபடி நகரும்
சாலையின் தன்மையைப் பார்
நான் சாலையின் ஒரு மூலையில் இருந்தாலும்
நீ சாலையின் பிரிதோர் மூலையில் இருக்கிறாய்
நாம் சாலையிலேயே இருக்கிறோம்
சாலை நம்மை இணைக்கிறது
மரங்கள் நம்முடன் உறவாடுகின்றன
பயணம் இனியதாகிறது
உன் கவிதைத் தொகுப்பைத் தூக்கியெறி

## மழை

பொய்த்து மழை
இரவு பெய்துவிட்டது
காற்றைத் தண்மையாக்கிய மழை
உடலை மென்மையாக வருடுகிறது
சாலையின் சிறுசிறு பள்ளங்களில்
நீர் தேங்கியுள்ளது
எங்கள் பூமி செம்மண் ஆனதால்
மழை நீரும் காவியேறியுள்ளது
காற்று வீச
சிறு அலைகள் மெல்லத் தவழ்கின்றன
கிணற்றிலும்
கொஞ்சம் நீர் பாய்ந்துள்ளது
அதன் ஸ்படிகத் தெளிவு
என் கண்களைக் கூசச் செய்கிறது
ஓடிப் பிடித்து விளையாடிக்கொண்டிருந்த
சூல் கொண்ட மேகங்கள்
மண்ணுடன் காதல் கொள்கையில்
மழை பிறக்கிறது
அதன் ஒவ்வொரு துளியும்
எங்களுக்கு உணவு
மழையைத் தியானித்து
சொற்கள் மூலம் வேண்டுதல் விடுக்கிறோம்
மழை
நீ நான் இவ்வகிலம் முழுவதும்
இன்றைக்கு மழைதான் எம் சிந்தனை
இன்றைக்கு மழைதான் எம் கடவுள்

## அளவு

இளவரசி பேசத் துவங்கிவிட்டாள்
அவளிடம் ஏராளமான கேள்விகள் உள்ளன
இதன் நிறம் என்ன
என் மனப்பதிவில் நீலம் புகுந்து விட்டது
எல்லாப் பொருள்களிலும்
நீலம் அப்பிக் கொண்டிருக்கும்
நீலம் அதிகமாகிப் போய் இருக்கும்
சிறிது நீலம் குறைக்க வேண்டும்
வர்ணங்களைக் குறைப்பதிலும் கூட்டுவதிலும்
நாம் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும்
உலகம் வர்ணமயமானது என
ஏற்கனவே கூறியுள்ளார்
பார்வை மிக முக்கியமான ஒன்று
எல்லாப் பொருட்களும்
வர்ணங்களால் ஆனது
ஒரு பொருளை
முழுமையாக விளக்க வேண்டும்
வார்த்தை ஒவ்வொன்றிற்கும்
ஒரு பொருள் உண்டு
அந்த அர்த்தத்தில்
சொல்லப்பட வேண்டும் அதை
முழுமையாக
ஒரு சித்திரம்
போல் இருக்க வேண்டும்
சித்திரத்திற்கு குரல் இருக்க வேண்டும்
அந்தக் குரலுக்கு உயிர் இருக்கவேண்டும்
இவ்வளவும் சேர்ந்தபின்
அதற்கு ஒரு அழகிருக்க வேண்டும்
படித்தவன் பார்க்க வேண்டும்
பார்ப்பவன் பேசவேண்டும்
பேச்சில் தெளிவு
வற்றுதது தெளிவு
நீங்கள் ஒவ்வொருவரும்
ஒரு சமவெளியை நிரப்பிக் கொண்டுள்ளீர்கள்

## வகுப்புக்கு வரும் எலும்புக்கூடு (இரண்டாம் பதிப்பு)*

வகுப்புக்கு வந்த எலும்புக்கூடுகள்
இன்று
படித்து பட்டம் பெற்று
டாக்டர் பட்டமும் பெற்று
ஆட்சி புரியத் துவங்கின
வேலை செய்யும்
எல்லா எலும்புக் கூடுகளும்
கலகலத்து
மினுமினுக்கி
சிலுசிலுக்கி
சந்தோஷமாய் இருப்பதாய்
பாவனை செய்தன
புதிதாய்ப் பிறந்த எலும்புக் கூடுகள்
வகுப்புகளுக்கு
டிபன் பாக்ஸ் எடுத்துச்செல்வது
தவிர்ந்து விட்டது
வாத்தியார் எலும்புக்கூடுகள்
புதிய புதிய
புத்திசாலியான
ஒட்டுப் போடக்கூடிய
எலும்புக் கூடுகளை
உருவாக்கி மகிழ்ந்தன
பெரும்பாலும்
ரத்தம் சுண்டிய
கரப்பான்களும்
ஒட்டுப் பூச்சிகளும்
ஏலக்காய்ச் செடிகளைக்
கெட்டியாய்ப் பற்றிக் கொண்ட
வெளிறிப்போன பல்லிகளும்
இன்னும் சில
ஜீவராசிகளும்
கூட்டணிகள் அமைத்துப்
போராடத் தயாராயின
அதற்குள் எலும்புக் கூடுகள்
ஒட்டுச் சீட்டைக்
கையில்
தயாராய் வைத்துக் கொண்டன

---

* இதே தலைப்பில் ஞானக்கூத்தனின் கவிதை 'அன்று வேறு கிழமை' என்ற தொகுதியில் காணப்படுகிறது. எனவே ஆத்மாநாம் தனது கவிதையை இரண்டாம் பதிப்பு என்று பெயரிட்டிருக்கிறார்.

## ஏதாவது செய்*

ஏதாவது செய் ஏதாவது செய்
உன் சகோதரன்
பைத்தியமாக்கப்படுகிறான்
உன் சகோதரி
நடுத்தெருவில் கற்பிழக்கிறாள்
சக்தியற்று
வேடிக்கை பார்க்கிறாய் நீ
ஏதாவது செய் ஏதாவது செய்
கண்டிக்க வேண்டாமா
அடி உதை விரட்டிச் செல்
ஊர்வலம் போ பேரணி நடத்து
ஏதாவது செய் ஏதாவது செய்
கூட்டம் கூட்டலாம்
மக்களிடம் விளக்கலாம்
அவர்கள் கலையுமுன்
வேசியின் மக்களே
எனக் கூவலாம்
ஏதாவது செய் ஏதாவது செய்
சக்தியற்று செய்யத்தவறினால்
உன்மனம் உன்னைச் சும்மாவிடாது
சரித்திரம் இக்கணம் இரண்டும் உன்னை
பேடி என்றும்
வீர்ய மிழந்தவன் என்றும்
குத்திக் காட்டும்
இளிச்ச வாயர்கள் மீது
எரிந்து விழச் செய்யும்
ஆத்திரப்படு
கோபப்படு
கையில் கிடைத்த புல்லை எடுத்து
குண்டர்கள் வயிற்றைக் கிழி
உன் சகவாசிகளின் கிறுக்குத் தனத்தில்
தின்று கொழிப்பவரை
ஏதாவது செய் ஏதாவது செய்

* Do Someting என்ற Gunter Grass ன் (ஜெர்மனி) கவிதையை முன்னோடியாகக் கொண்டு எழுதப்பட்டது. க்ராஸின் கவிதை அடிப்படையில் மிகவும் கிண்டலானது. ஆத்மாநாமின் கவிதை தீவிரத்தையே தொனியாகக் கொண்டது.

## காட்சி

முதலில்
நீதான் என்னைக் கண்டு கொண்டாய்
எனக்குத் தெரியாது
மனிதர்களைப் பார்த்த வண்ணம்
முன்னே வந்து கொண்டிருந்தேன்
உயிருடைய ஒரு முகத்துடன்
பளிச்சிட்டுத் திரும்பினாய்
பின்னர் நடந்தவைக்கெல்லாம்
நான் பொறுப்பல்ல
எந்த ஒரு கணம்
என் பார்வை உன் மேல் இல்லையோ
அந்த ஒரு கணம்
முழுமையாக என்னைப் பார்ப்பாய்
அதையும் நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன்
மாமன் ஒருவன்
உன்னை இடம் பெயர்க்க
காட்சிகள் மாற மாற
நானும் நீயும்
ஒரு நாடகத்தை முடிக்கிறோம்

## நான்தான் நான்

முருங்கை மரக் கிளையினின்று
இலைகள் உதிர்கின்றன
வாழ்க்கை நகர்கிறது

வானின் நீலத்தைத் தீட்டியவனும்
மேகக் கூட்டங்களை செதுக்கியவனும்
கண்நிறைய மரங்களை அளிப்பவனும்
கடலுக்கு வெண் நுரை வழங்கியவனும்
மண்ணும் மலையும் புழுவும் பூச்சியும்
நான்தான் நான்தான் நான்தான்

## பிச்சை

நீ ஒரு பிச்சைக்காரனாய்ப் போ
பிச்சை பிச்சை என்று கத்து
உன் கூக்குரல் தெருமுனைவரை இல்லை
எல்லையற்ற பெருவெளியைக் கடக்கணும்
உன் பசிக்காக உணவு
சில அரிசி மணிகளில் இல்லை
உன்னிடம் ஒன்றுமே இல்லை
சில சதுரச்செங்கற்கள் தவிர
உனக்குப் பிச்சையிடவும் ஒருவருமில்லை
உன்னைத் தவிர

இதனைச் சொல்வது
நான் இல்லை நீதான்

## பூஜை

குங்குமச் சிகப்பில் மூழ்கின
உயிர்க்கரு பீஜங்கள்
கரும்புள்ளிகள் தோன்றும்
சாம்பற்பச்சையுடல்
வயிறு வெடிக்கச் சிரிக்கும்
பூசணிகள் நடுத்தெருவில்
ஆயுதங்கள் வாகனங்கள்
மாலைத் திலகம் அணிய
இங்கு ஆயுத பூஜை

# நாங்களும் நீங்களும் அவர்களும்

நமக்குள் நாமே
பேசிக் கொள்கையில்
பலர் கலக்கிறார்கள்

நீங்கள் கேட்கிறீர்கள்
நியாயமா நீங்கள் செய்வது

நீங்கள் கேட்பவர்கள்
நீங்களே கருவி

நீங்களும் உங்களைக்
கேட்டுக் கொள்கிறீர்கள்

நீங்களும் நாங்களும்
ஒன்று தானே

நீங்களே உங்களைக்
கேட்டுக் கொள்வதெப்படி

நாங்களே நீங்கள்
என்றால் நீங்கள் யார்
நீங்களே நாங்கள்
என்றால் நாங்கள் யார்

நீங்கள் கேள்வி என்றால்
நாங்கள் பதில்
நாங்கள் பதில் என்றால்
நீங்கள் கேள்வி

உங்கள் கேள்வியும்
எங்கள் பதிலும்
எப்படி ஒன்றாகும்

கேள்வி என்ன பதில் என்ன
கேள்வியும் பதிலும் ஒன்று

ஒன்று இரண்டா என்பதல்ல கேள்வி
கேள்வி பதில் என்றால்
கேள்வியா பதில்

கேள்வி என்ன பதில் என்ன

நீங்கள் எங்களை
நாங்கள் உங்களை

## இயக்கம்

மலைகளினின்று இறங்கி வந்தேன்
கடல்களினின்றும் மூழ்கி வந்தேன்
நதிகளும் நகர்ப்புறமும் சுற்றி வந்து
அடர்ந்த காடுகள் சுற்றி வந்தேன்
எங்கும் உயிரணுக்களின் இயக்கம்
ஒரு கணத்தின் அணுப்பிளவில் வெளிவந்தேன்
ஒளியினும் வேகம் மிகுந்து
மூச்சு விட்டேன் மூச்சு இன்றி — இயல்பாகவே
அக்கணம் உணர்ந்தேன்
நான் இறந்து நேரம் கழிந்ததை

## இரவில் பேய்கள்

குருட்டுக் கண்களைத்
திறந்து பார்த்தால்
இருட்டுதான்
பிரகாசமாய்த் தெரிகிறது
செவிட்டுச் செவிகளைக்
கூராக்கி முயற்சித்தால்
நிசப்தம் தான்
கூச்சலாய்க் கேட்கிறது
நுகராத நாசியை
நுழைத்துப் பார்த்தால்
சாக்கடை மணம்
சுகந்தமாய் இருக்கிறது
உருமாறிப் போனவன்
உடல் மாறி
மனம் மாறினபின்

## காளை நான்

வழக்கம் போல்
காளை
தென்னை மரத்தில்
கட்டப் பட்டுள்ளது அதன் கொம்புகளுக்கு
வண்ண மணிகள்
கழுத்துக்கு
குலுங்கும் சலங்கை
வயிற்றைச் சுற்றி
திருஷ்டிக் கயிறு
அசை போட்டபடி
காளை
அமைதியாயிருந்தது
நான்
என் குளிர் கண்ணாடிகளுடன்
பக்கத்தில் இசைப்பெட்டி
சில புத்தகங்கள்
நாமிருவரும்
ஒரே தளத்தில்
இருப்பதாய்
மனம் அசை போட்டது
சிறிது நேரத்தில் மூக்கணாங்கயிற்றுடன்
பிணைத்திருந்த
கயிற்றை அவிழ்த்து
வண்டிக் காரன் சென்று விட்டான்
காளையும் நகர்ந்து விட்டது
என் மூக்கைத் தொட்டுப் பார்த்தேன்
கயிற்றை இழுப்பவர்களை நினைத்ததும்
அடி வயிற்றிலிருந்து
பெரும் பீதி தோன்றிற்று
ஆயினும் எனக்கு நிம்மதி
எனக்கு மூளை இருக்கிறது
மனம் அமைதியாய் இருக்கிறது

## எழுதுங்கள்

எப்படி எழுத வேண்டும் என்று
நான் கூறவில்லை

உங்கள் வரிகளில்
எந்த விபரீதமும் நிகழ்வதில்லை

வெற்று வெளிகளில்
உலவும் மோனப் புத்தர்கள்
உலகம் எக்கேடாவது போகட்டும்
காலத்தின் இழுவையில் ரீங்கரிக்கின்றேன்
எனப் பார்வையின் விளிம்பில் இருக்கிறார்கள்

உலகப் பாறாங்கல்லில் நசுங்கியவன் முனகலின்
தொலை தூர எதிரொலி கூடக் கேட்கவில்லை

வார்த்தைகளின் சப்தங்கள்
அதற்குள்ளேயே மடிந்து விடுகின்றன

எழுதுங்கள்
பேனா முனையின் உரசலாவது கேட்கட்டும்

## அவள்

பத்து மாதங்களுக்குள்
மீண்டும்
ஒன்றுக்கிருக்கத் தடை
எதனால் வீழ்ந்தார்களோ
மறுபடியும் அதே வேறு பெயரில்
நல்ல வேளை நான் வீட்டிலேயே
இருந்து விட்டேன்
ஆனால் திடீரென்று
சாலைகளில்
அழுத்தமான வண்ணத்தில்
இருக்கும் அவை
கட்டணம் அதே பத்து காசுகள்
அதே வீரய்யாவோ வெங்கய்யாவோ
உள் நுழைந்தேன்
கால் வைத்த இடமெங்கும்
நீக்கமற நிறைந்த அழுக்கும் வாசனையும்
உடன் வெளியேறினேன்
காக்கி நிக்கர்காரன்
பத்துகாசு என்றான்
இந்த அசுத்தத்திற்குள்
என்னால் போக இயலவில்லை
உனக்கெதற்குப் பத்து காசு என்றேன்
அந்தக் கணக்கெல்லாம் இங்கே செல்லாது
உள்ளே போனால் கட்டணம் என்றான்
நான் கோபத்துடன் மறுத்தேன்
அதற்குள்
தொப்பியுடன் இரண்டு காக்கிகள்
யாரைய்யா இங்கே தகராறு செய்வது
அரசாங்கக் கழிப்பிடத்திற்கெதிராய்
அவசர மாற்றப் புதுச்சட்டத்தின் கீழ்
உள்ளே தள்ளு இவனை
ஒன்றுக்கு வெளியே நான் உள்ளே
சரித்திரம் தலைகீழானாலும் மீண்டும் தலைகீழாகும்

## அவசரம்

அந்த நகரத்தில்
இருவர் கூடினல் கூட்டம்
நால்வர் கூடினல் பொதுக்கூட்டம்

சாலையில் கூட்டமாய்ச் செல்லக் கூடாது
வீட்டுக்குள் யாரும் நடக்கலாம்
ஒவ்வொரு வீடும்
தார்ச்சாலையால் இணைக்கப் பட்டிருக்கும்

மறைவிடங்கள் அங்கில்லை
குளிப்பவர்கள் கூட்டங்கூட்டமாய்க்
குளிக்க வேண்டும்
தண்ணீர் கிடைக்கும் நள்ளிரவில் மட்டும்

சிகரெட் பிடிக்கவும் அங்கு தடை
ஆஷ்ட்ரேயை அதிகாரி பார்த்தால்
அவரை நகரத்தின் சகாராவுக்கு அனுப்புவார்
அங்கே ஏற்கனவே உள்ளவரோடு சேர்ந்து
அதனைப் பசுமையாக்க வேண்டும்

நகரத்தில் தள்ளிப்போடாத அவசரம்
உள் நாட்டு மனத் தெளிவு
நகரத்தின் மக்களுக்கு கிடைக்கும் ஒரே டானிக்
கடுமையான உழைப்பு

பத்திரிகைளில் விளம்பரங்கள் இல்லை
அதை வாங்கு இதை வாங்கு என்று
மலிவாக ஏராளமாகக் கிடைத்தது
நகரத் தலைவரின் பொன் மொழிகள்

எல்லோரும் அவரைப் புகழ்ந்தார்கள்
மந்திரிகள் அவரைப் புகழ்ந்தார்கள்
அரசாங்க அதிகாரிகள் புகழ்ந்தார்கள்

மக்கள் சுபிட்சமாய் இருந்தனர்
அவசரமாய் அவ்வப்போது ஒன்றுக்கிருந்து

## டெலக்ஸ்

○ தலைநகருக்குச் செய்தி பறந்தது
இன்று காலை 9 மணி வரை
1,75,843 தலைகள் வீழ்ந்துள்ளன

• பிரமாதம் மாபெரும் சாதனை
தலைகளைப் புதைக்க இடமுள்ளதா

○ இல்லை மேலும் மேலும் தலைகள் வீழ்ந்து கொண்டேயிருக்கின்றன

• தலைகளை எரிக்க புதிய இறக்குமதி இயந்திரம் அனுப்புகிறோம்
திராட்சைத் தோட்டங்களுக்கு அவை நல்ல எருவாகும்
உங்கள் தலைகளை பத்திரமாய் வைத்திருங்கள்
நாளை பொருட்காட்சிக்குப் பயன்படும்
மேலும் தலைகளை வீழ்த்துவதற்கு
குறைந்த பட்ச திட்டமேதேனும் உள்ளதா

○ இன்னும் இரண்டு காவல் நிலையங்களும்
பத்தாயிரம் சோற்றுப்பட்டாளங்களும் இருப்பின்
செயல்திட்டம் ஊக்கம் பெறும்

அனுமதிக்கிறோம் உங்களுக்குப் பூரண சுதந்திரம் உண்டு

# இதோ ஒரு கவிதை

இதோ ஒரு கவிதை இப்போது இவ்வறையில் பேசிக் கொண்டிருக்கும் நானும் நீங்களும் நாமிருவரும் என்றால் கோபம் கொள்ளும் இவ்வறை ரகசி யங்கள் பதிவு செய்து நடுவில் நமக்கு மட்டும் கேட்கும் குரல் அது நம் குரல் தான் ஏன் எப்படி கேட்காதீர்கள் விளக்கினால் புரியாது விளக்கினால் தெளி யாது இன்னும் யுகங்கள் பல இங்கிருப்பின்னும் யுகத்திற்கு எத்தனை பூஜ்யங் கள் எனப் பாட்டனுக்குத்தான் தெரியும் பின்னர் எங்கிருப்பேன் எப்படியும் சிலர் இப்படி இருப்பார்கள் என நம்பிக்கை இது வா கவிதை என்ன இருக்கி றது இதில் எதையும் தேடாமல் சும்மா படியுங்கள் உங்கள் மூக்கு கண்ணாடி களை உடைக்கும் வார்த்தைகள் இதோ கழற்றி எறியுங்கள் சீக்கிரம் அப்போ துதான் தெரியும் தூக்கில் தொங்கும் தமிழ் வாத்யார் தொடரும் இன்னும் வரும் நாளை நமதே.

இது ஆண்கள் கழிவிடம்
பக்கத்தில் பெண்கள் கழிவிடம்
நகரத்தில் நாற்சந்திகளில்
படத்துடன் கட்டிடங்கள்
துப்புரவாளர் வீரய்யன்
எட்டு முதல் ஐந்து வரை
கட்டிய நகரச் சபைக்குப்
பத்து காசு வருமானம்
சுத்தமாய் நின்று எதிர்ச் சுவற்றில்
மூத்திரம் இருங்கள்

இப்போது போதுமிது
மீண்டும் பார்ப்போம்
உங்கள் கண்கள் காதுகள் சிவக்க

## எட்டி நடக்கும் கைகள்

இன்றைக்கு என்ன செய்வது
என்று கேள்வி கேட்டுச்
செல்லும் மக்களில் ஒருவர்

கூட்டத்தில் எங்கே செல்கிறார்

காலும் கையும் அவர்
பிறந்த வீட்டுச் சொத்து
தலையும் வயிறும் அவர்
வளர்ந்த வீட்டுச் சொத்து

அவர் எங்கே செல்கிறார்
தலையில் கை வைத்த படி

தலைமேல் இருப்பது அவர் கையல்ல
வளர்ந்த வீட்டுக் கை

எங்கே செல்கிறார் அவர்

ஓகோ ஓட்டளிப்பதற்கு
பிறந்த நாட்டுக் கடமையாற்றுவதற்கு

ஓ இன்னுமொரு கை அவர் முதுகில்
தள்ளு கிறதே
அது எந்தக் கை

நாட்டின் அதிகாரத்தின் கை
நாயகக் கடமை செய்ய
பலாத்காரம் செய்யும கை

அவர் எங்கே செல்கிறார்
எங்கே அவர் செல்கிறார்

நடப்பது அவர் கையல்ல
எட்டி உதைக்கும் □யை
காலால் அவர் கைகள்



இந்த நகரத்தை எரிப்பது
மிகச் சுலபம்
ஒரு தீப்பெட்டி போதும்
தீப்பெட்டி விலை மிக மலிவு
ரொட்டியின் விலையைவிட மிகமிக
ஒரு லிட்டர் கிரஸினும் வேண்டும்
அதுவும் கிடைக்கும்
அரசின் சீரிய வினியோகிப்பில்
ஓசைகள் குறைந்த நள்ளிரவில்
எங்கேனும் துவங்கலாம்
துணிவுள்ளவன் விழித்திருந்து
அனுமான் எரித்தான் லங்கையை
வாலில் தீ வைத்த போது
வானைத் தொட்ட தீ தணிந்தது
எழுந்தது புது லங்கை
அழிந்தானா ராவணன்
போராடினான் நாட்கணக்கில்
மடிந்தான் குருதி வெள்ளத்தில்
இன்றும்
அனுமான்கள் உண்டு வாலின்றி
ராவணர்களும் உண்டு
தீயுண்டு நகரங்கள் உண்டு
தனியொருவன் எரித்தால் வன்முறை
அரசாங்கம் எரித்தால் போர்முறை

## விளையாட்டு அரங்கங்களில் கூடாரங்கள்

விளையாட்டு அரங்கங்களில் கூடாரங்கள்
இயந்திரத் துப்பாக்கிகளுடன்
ராணுவ வீரர்கள்
தெருவில்
ஒழுங்கு அமைதி இப்போது நமக்குத் தேவை
ஒரு குறிப்பு
தகவல் தொடர்பு அமைச்சர்கள்
கூட்டத்தில் அறிவிப்பு
இன்னும் எழுபது சதவீத மக்களை
தொலைக்காட்சியும் வானொலியும்
அடைய வேண்டும்

எந்தச் செய்திகளுக்காக

பசும் புதர்களிடையே நிழல்கள்
நடமாட்டங்கள் வலுக்கின்றன
இவைகளெல்லாம்
ஓசையின்றி அமுக்கப்படும்
தீப்பற்றி எரியும் கிராமங்களுடன்
உயிர்த் தொடர்பு துண்டிக்கப்படுகிறது
கலவரமும் பீதியும்
நாடித் துடிப்புக்களை முறுக்கேற்றுகின்றன
வெகு தொலைவில் இல்லை
கிராமங்கள் மற்றும் நகரங்கள்
முரண்பாடுகள் முற்ற முற்ற
ஒத்த கருத்துக்கள் இணைகின்றன
சமூகம் முகமூடி ஒன்றை அணிந்து கொள்கிறது
தீக்காயங்கள் பட்டவர்களின் முகங்கள்
வேற்றுமையின்றி ஒன்றாயிருக்கின்றன
புதிய புதிய முகங்கள்
ஒன்றன் பின் ஒன்றாய்
வெளிக் கிளம்புகின்றன
புகை மூட்டத்தின் இடையே
செய்திகள் வாசிக்கப் படுகின்றன
ஒழுங்கு அமைதி இப்போது நமக்குத் தேவை
விளையாட்டு அரங்கங்களில் கூடாரங்கள்

## இயக்கம் — ஒன்று

நகரத்தின் இயக்கத்தில்
சிதறிய மக்கள்
மூச்சுத் திணற ஓடுகின்றூர்
மேலும் கீழும் ஏறி இறங்கி

எதிர் கொண்டு
மூச்சு முட்ட
ஒரு நிலே வருகையில்
காலம் கடந்த உணர்வில்
உருத் தெரியாமல் நசுங்கி
கோணல் முகங்களுடன்
தம்மையே காண வெட்கி
கெட்டியாய்ப் பற்றிக் கொண்டு

உடும்புப் பிடியில் சிதைந்த
கடவுளே
இழுத்துத் தெருவில் வருகின்றூர்

உன் பெயர் உன் உருவம் உன் ஆட்சி
நாங்கள் அடிமைகள் என

மரங்கள்
பூக்கள் குலுங்க
நகைக்கின்றன
காற்றின் அரவணைப்பில்

# செய்திகள் வாசிப்பது கமலா பத்மநாபன்

சாலை
மரங்கள்
எண்ணிக்கையிட்டுக் கொண்டே வந்தோம்
236 ஒதிய மரம்
237 புளிய மரம்
238 ஆலமரம்
239 பனைமரம்
240 ஜாதியில்லா மரம்
மர அப்பாவிகள் கண்டுகொள்ளவில்லை
தொலைவில் மலைக்காடுகள் புகை வானேக்குகிறது
வீட்டுக்கு ஒரு மரம் வளர்ப்போம்
மரங்கள் நம் தேசத்தின் சொத்து
மரத் தரகர்களுக்கு காடுகளை ஏலம் விடுவோம்
வீடுகளை அகலமாய்க் கட்டாதீர்கள்
விண்ணை முட்டும்படி கட்டுங்கள்
இது சுற்றுப்புறச் சூழல் ஆண்டு
தோட்டங்கள் வேண்டும்
விளையாட்டுத்திடல்கள் வேண்டும்
பூங்கா வனங்கள் வேண்டும்
மார்ச் 22 1982 வரை
1,82,48,352
பதியன்களை நட்டுள்ளோம்
புதிய ஆணையின் படி
மரங்களை வெட்டுபவர்களுக்கு
இரண்டாண்டுகள் கடுங்காவல் தண்டனை
இன்றைய தலைவரின் செய்தி
உற்பத்தி பெருக வேண்டும்
நச்சுத் தொழில்கள் ஒழிக்கப்பட வேண்டும்
கங்கை நீர் சாக்கடையாவதைத் தடுப்போம்
கோடலிகள் உற்பத்தியை
சிறு தொழிலாளர்களுக்கு விட்டுவிடுவோம்
மரங்களின் விலை ஏறிவிட்டது
மேன்மேலும் எரி பொருளுக்கும்
வீட்டு வசதிக்கும்
குறைந்த விலையில் மரங்களைத் காணிக்கையாக்குவோம்
காட்டிலாகா அதிகாரிகளுக்குத் துப்பாக்கிகளைக் கொடுங்கள்
தம்மைப் பாதுகாத்துக் கொள்ள
சுள்ளி பொறுக்குவோரை விரட்டியடிக்க

ஆகாசவாணியின் செய்தி இத்துடன் முடிவடைந்தது

## தடை

தடை
அதன் தன்னம்பிக்கையோடு
பிரகடனப் படுத்தப் படுகிறது
யாரும் கூட்டமாய் நிற்கக்கூடாது
கூட்டங்கள் கூடாது
சமய பிண ஊர்வலங்கள் தவிர
வேறு ஊர்வலங்கள் செல்லக்கூடாது
ஆட்டோவில் ஒலிபெருக்கி அலற
பொதுமக்கள் காய்கறி வாங்கிக்கொண்டிருந்தனர்
சாமானியன் எதையுமே மதிப்பதில்லே
அதைப் போலவே இதையும்
இந்த நாட்டில்
நால்வர் கூடிப்பேசும் போது
வரும் விஷயங்கள்
உலகறிந்ததாயிற்றே
ஏனிந்தக் கலவரம்
என்னுடைய கோரிக்கை
தடைக்கு
மதிப்பு வேண்டும்
சும்மா வெறுமனே
ஆகாயச் சிந்தனே
புரிபவனி. ம்
எதற்குத் தடை
பஸ்ஸுக்குத் தீ
கலவரம்
தடியடி
கண்ணீர்ப்புகை
துப்பாக்கிச் சூடு
வந் தாலொழிய
நாம் அதைத் தீண்ட வேண்டியதில்லே
மதிப்போம் தடையை
மரியாதையாய் நடப்போம்
போகிறபோக்கில்
காதில் விழுந்தது
வேலேநீக்கம் செய்யப்பட்ட
பன்னிருவர்
சாகும் வரை உண்ணுவிரதம்

# இவர்களை எல்லாம் எனக்குத் தெரியும்

இவர்களை எல்லாம் எனக்குத் தெரியும்
லாரிக் கம்பெனி ஓனர்களை
ஆம்னி பஸ் முதலாளிகளை
பெரிய நடுத்தர சிறிய தொழிலாளர்களை
சொகுசாய்க் காரில் திரும்பும் கம்பெனி அதிகாரியை
ஸ்கூட்டரில் திரும்பும் கண்காணியை
சைக்கிளில் நடந்து திரும்பும் தொழிலாளியை
எஞ்சினியரை
டாக்டரை
வக்கீலை
அவனை இவனை
தெருப் பொறுக்கியை
பணம் பெருக்குவதிலேயே
குறியாய் இருக்கும்
பள்ளி கல்லூரி ஆசிரியர்களை
கோவிலிலிருந்து திரும்பும் மாமியை
டீக்கடை மாஸ்டரை
காஸ் ஏஜென்ஸி நடத்துபவரை
பால் விநியோகம் செய்பவரை
தினசரி பேப்பர் போடுபவரை
பேப்பர் போடும் பையனை
சைக்கிள் கடைக்காரரை
வல்கனைஸிங் செய்பவரை
விறகு டிப்போக் காரரை
கருமாரி அம்மன் தீட்சிதரை
பெருநகர் போக்குவரத்தை
பெருநகர் போக்குரத்து ஊழியர்களை
டாக்ஸி ஆட்டோ ட்ரைவர்களை
மளிகைக் கடைக் காரரை
தேசிமயமான வங்கிகளை
ஸேவிங்ஸ் பாங்க் காரர்களை
உயர்திரு இலக்கிய வாதிகளை
முற்போக்கு மடையர்களை
நாடகக் கூத்து ஸினிமாக் காரர்களை
அவர்களை இவர்களை உவர்களை

They, All of them, Know என்ற தலைப்பிட்ட Charles Bukowskiயின் கவிதையை முன் மாதிரியாகக் கொண்டு இக்கவிதை எழுதப்பட்டது என்பதை கணையாழியில் கவிதை வெளிவந்த போது ஆத்மாநாம் ஒப்புதல் செய்தார். Charles Bukowski யின் நீண்ட கவிதை என்னால் மொழி பெயர்க்கப்பட்டு ஸ்வரம் — 7 (1982) ல் வெளிவந்திருக்கிறது. (தொகுப்பாளர்)

## கேள்விக் குறி

மழை பொழிய வேண்டுமென்று
எழுத்தில்
மழை பொழிய வேண்டுமென்று
மையைக் கொஞ்சம் நனையவிட்டேன்
வெளிர்ப் பச்சை நிறத்தில்
காகிதத்தில் பரவியது
வர்ணத்தில் மழை பொழிந்து கொண்டிருந்தது
ஒரு பகுதியில்
நீலத்தைத் தெளித்தேன்
இன்னொரு புறத்தில் கறுப்பை உதறினேன்
மற்றும் ஓர் புறத்தில் சிகப்பை
வண்ண வண்ணமாய்
மழை பொழிந்து கொண்டிருந்தது
அப்பொழுது
ஒரு பொருள்
குறுக்கே வந்தது
மழை அப்பொருளின் வண்ணமாயிற்று
மாறிவரும் மழையின் முதல் வண்ணம்
என்ன என்று
ஒரு கணம் நிதானித்தேன்
வர்ணமற்று
மழை பொழிந்து கொண்டிருந்தது
வர்ணங்களற்ற அம்மழை
குளிர்ச்சியாய் இருந்தது
தொடர்ந்து அம்மழை
மனத்தில் பெய்துகொண்டேயிருந்தது
வெளியே
வண்ண வண்ணமாய் மழை
ஒவ்வொரு கணமும் நிதானித்துக் கொண்டிருந்தேன்
உள்ளும் புறமும் அற்ற ஒரு பொருள்
உருவாக்கம் கொண்டது

## அமைதி அமைதி — 1

அமைதி அமைதி
அண்டமெங்கும் பேரமைதி
நிலவுமிவ்வேளையில்
உங்கள் மூச்சுக்காற்றின்
ஒலி கூட
இருட்டுக் குகைகளில்
அதள பாதாளங்களில்
பேரொலியாய் எதிரொலிக்கிறது
உங்கள் மூச்சை
சீராக ஒலியின்றி
காலம் நீட்டி
அமைதியாய்
வெளிவரச் செய்யுங்கள்
இசை நாட்டியம் கலை இலக்கியம்
யாவும்
நம்மை மகிழ்விப்பதற்கே
நம்மை மட்டும் அறிவதற்கே
இன்றைக்கு
மலைவாழ் பழங்குடியினர் தவிர
எவரும்
பசியால் வாடவில்லை
உண்மை
பதறுதீர்கள்
எந்தக் குடி முழுகிவிட்டது
அமைதியாய்
இதமாய்
ஓசையின்றி
மூச்சு விடுங்கள்

வளமான எதிர்காலத்துக்கு
உழைப்பின்றி இட்டுச் செல்ல
தேசிய பரிசுச்சீட்டுகளின்
புதிய வரிசை வெளிவந்துள்ளது
எதற்காகப் பதறுகிறீர்கள்
அமைதி அமைதி

## செடியுடன் ஒரு உரையாடல்

ஒரு செடி என்னைப் பார்த்துச் சிரித்தது
நானும் புதிய அறிமுகத்தை மகிழ்ந்தேன்
நீ யார் என்று அது என்னைக் கேட்டது
நான்...... நான்.....
எதுவும் சொல்லத் தெரியவில்லை
பெரு மூச்சொன்றை வெளியிட்டேன்

ஏன் இப்படி லோல் படுகிறாய்
என்னைப் போல் அமைதியாய் இரேன்

காற்று என்னை அரவணைக்கிறது
நானும் ஆடி அசைந்து சந்துஷ்டிக்கிறேன்
இருந்த இடத்திலேயே சொர்க்கம் உள்ளது
காற்று மென்மையானது
குளிர்ச்சியை உடலெங்கும் நிறைக்கிறது
காற்று வந்து கொண்டேயிருக்கிறது
நிற்பாடும் புறப்பாடும் அதற்கில்லை
என்னைக் காதலிக்கும் காற்று
இவ்வுலகம் முழுதையும் காதலிக்கிறது
எனது இலைகள் காற்றின் வருகையால்
மகிழ்ச்சி நாட்டியம் நிகழ்த்து கின்றன
அம்மா - காற்று நம்மை ஏன் காதலிக்கிறது என
என்றுமே இலைகள் கேட்பதில்லை

மழையும் அப்படித்தான்
காலம் காலமாய்
என்னை ஊட்டி வளர்க்கிறது
பனிக்காலத்தில் தூறும் மழை
கிளு கிளுப் பூட்டுகிறது

காற்றும் மழையும் என்னைப் போஷிப்பது போல்
சூரியனும் தன் வைரக் கிரணங்களால்
என்னைப் பார்க்கிறான்
இதமாக சில நேரம்
இடமாக சில நேரம்
என் இலைகளின் ஒளியை
உலகுக்களிப்பவன் அவன்தான்

எனக்கு எவ்விதப் பிரச்னையும் இல்லை
நீ என்னைக் கிள்ளினால் ஒழிய

பார் என்னை
நீ யார் என்றுனக்குப் புரியும்

## நான் தான் வீரகேஸரி

நான் தான் வீரகேஸரி
உறையிலேயே உறங்கும்
என் வாளைச் சுழற்றி
உங்கள்
ஒட்டிய உலர்ந்த
வயிற்றில் ஒரு கீறல்
ஸ்ட்ரா ஒன்றை வைத்து
ரத்தத்தை உறிஞ்சுகிறேன்
கூர் நகக் கைகளால்
வயிற்றைப் பிளந்து
குடலை உருவி
எச்சில் இலைகளுக்கு
அலையும் நாய்களுக்குப்
போடுகிறேன்
ஆடு சதைகளுக்கு ஏராளமான போட்டி
பருந்துகளிடமிருந்து
மீதமிருக்கும் உடலின் பகுதிகளையெல்லாம்
ப்ளேடால் கீறுகிறேன்
எட்டி உதைத்து
கொசுக்கள் நிறைந்த சாக்கடையில்
தள்ளுகிறேன்
அசையும் பகுதிகள் மீதெல்லாம்
இரட்டைக் குழல் துப்பாக்கி கொண்டு
சுட்டுக் கொண்டேயிருக்கிறேன்
நீங்கள் பார்த்துக் கொண்டேயிருக்கிறீர்கள்

# இரண்டு கவிதைகள்

நூலக மேசைக்கருகில்
ஒருவர் புத்தகம்
படித்துக் கொண்டிருக்கிறார்
அவர் படிப்பது வேறு புத்தகம்
நீங்கள் படிப்பது வேறு புத்தகம்
ஒரு நாள்
நீங்கள் இருவருமே
ஏன் எல்லாருமே
ஒரே ஒரு புத்தகத்தைத்தான் படிக்கப்
போகிறீர்கள்
அது உங்கள் புத்தகம் தான்

தாள்கள் படபடக்க
எழுத்துக்கள் வார்த்தைகளாகி
வார்த்தைகள் வாக்கியங்களாகி
பொருள் கிடைத்தது
பொருள் கிடைத்தவுடன்
உலகம் நாசமாகி
புதியதாய்த் தெரிந்தது ஒரு உலகம்
பொருள் கிடைத்ததோ ஒருகணம் தான்
அந்தக் கணமும் கைநழுவிப் போகப்
பார்த்த பழைய உலகத்தையே
மீண்டும் மீண்டும் பார்க்கிறேன்
தாள்கள் படபடக்க

## சாதனை

சாதித்திருக்கிறாயா நீ
என்றது ஒரு கேள்வி
என்னிடம் இப்பொழுது
பதில் இல்லை
என் உடல் மரித்தபின்
எழும் கல்தூண்
முன் கேள்

## உண்மை

உண்மை பேசுகையில்
கடவுள் உன்னுள் இருக்கிறார்
என்ற மூதாட்டி மரித்து
ரொம்ப நாளாச்சு

நான் உண்மை மட்டும் பேசுகையில்
உலகிற்கு
நீ ஒரு பொய்யன்
நீ ஒரு சந்தர்ப்பவாதி
நீ ஒரு சமூகவிரோதி
நீ ஒரு தேசத்துரோகி
இன்னும் பிற
நான் கூறிய ஒரே பொய்
கடவுள் இருக்கிறார்.

## புறநகர்

யாரையும் எதிர் பார்க்காத நாள்
பெரிதாய் வேலை ஏதுமில்லை
சில பக்கங்களை புரட்ட முடிந்தது
இசைப்பெட்டி இயங்கிற்று
பொழுது நகர்ந்து விட்டது
மாலை
படிக்கட்டில் அமர
உலகம் வியர்த்தபடி நகர்ந்து கொண்டிருந்தது
எரிபொருள் பொறுக்கும் குறத்தி
பள்ளிப் பெண்கள் சீருடையின்றி
காகிதம் தின்னும் ஆவினங்கள்
வேலையில் கசங்கி முகம் கோணிய மனிதர்கள்
திரும்பும் பேருந்துகளில்
சற்றே தெளிந்த முகங்கள்
புறப்படும் பேருந்துகளில்
என் வானொலித்துக்கொண்டிருக்கிறது
சிறிய நிறுவனங்களில் அமைதி நிலவுகிறது
மாலை இதழ்கள்
பரபரப்புடன்
திரித்துக் கொண்டிருந்தன
தேனீர்க் கடைகளில்
அரசியல்
சூடாகக் கிடைக்கிறது
கட்சி வேறுபாடின்றி
பொது மக்கள்
திருப்தியாயிருக்கிறார்கள்
வெளிப்படையான
கலவரம்
குழப்பம்
தெளிவின்மை
எதுவுமின்றி
நகர்ப்புறம்
அமைதியாகவே
ஊர்கிறது

## எழுப்பப் பட்ட சப்தம்

சப்தம் எழுந்து விட்டது
கடலிலிருந்து
வண்டிலிருந்து
அக்கடா என்று கூறு போடப்பட்ட
வயல்களிலிருந்து
ஓவியத்திலிருந்து
இறுதியாக
ஒரு சொல்லிலிருந்து
அமைதி குலையத் தொடங்கிற்று
சப்தத்தின் பிடிப்பிலிருந்து
ஓடி ஒளியத்துவங்கிற்று
அமைதியைக் காண இயலா சப்தம்
பெரும் கூச்சலுடன் ஓய்ந்தது
நிசப்தம் உருவாயிற்று
எங்கும் ஒரே நிசப்தம்
நிசப்தத்தைக் கண்டு அஞ்சிய உலகம்
சப்தம் போட ஆரம்பித்தது
மாறி மாறி
சப்தமும் நிசப்தமும்
ஆட்சி புரியத் தொடங்கிற்று
சிறிது காலத்தில்
சப்தமும் நிசப்தமும்
ஒன்றுயிருக்கப் பழகிவிட்டன
இணைபிரியா ஒன்றுகிவிட்டன
சப்த நீட்சியின் ஓரத்தில்
அமைதி
பேரமைதிக்கான
தவத்தைத்
துவங்கிற்று

## வெளி நாட்டு மனிதர்கள்

வெளி நாட்டு மனிதர்கள் வந்துள்ளார்கள்
என்று உதவியாளன் சொன்னான்
உள்ளே வரச்சொல் என்றேன்
தொப்பியைக் கழற்றியபடி இருவர் வந்தனர்
செருப்பைக் கழற்றிவிட்டு
உள்ளே வரச் சொன்னேன்
ஏ.ஸி. யைப் போட்டுவிட்டு
என்ன வேண்டும் என்றேன்
விஸ்கி என்றனர்
இங்கே எல்லாம் லோக்கல் தான் என்றேன்
மேஜை மேல் உள்ள பத்திரிகையைப் புரட்டி
என்ன இது இந்திய எழுத்துக்கள் என்று கேட்டனர்
அவை அனைத்தும் மொழிபெயர்ப்புகள் என்றேன்
சிரித்தபடி அவர்கள்
வளமான தமிழர்கள் வாடலாமா
என்றவன் எவன் என்று கேட்டனர்
அதற்கென்ன இப்போது என்றேன்
எஸ்தோனிய மொழியிலும் ஸ்வாஹிலியிலும்
அதை மொழிபெயர்க்கவே இங்கு வந்தோம் என்றனர்
குப்பை போல் கிடந்த
காகிதக் கட்டுக்களிலிருந்து
அதன் ஆங்கில மொழிபெயர்ப்பை
எடுத்து நீட்டினேன்
லோக்கல் வந்தது

## 2083 ஆகஸ்ட் 11

என் கவிதை ஒன்று
இரண்டாயிரத்து எண்பத்திமூன்றில்
கிடைத்தது
கடற்கரையில்
நானும் ஞானக்கூத்தனும்
பேசிக் கொண்டிருந்தோம்
சுண்டல் வாங்கிப் பிரித்தால்
காகிதத்தில் ஒரு கோடு
ஆத்மாநாம் எனும் வாசகங்கள்
கவிதை ஆரம்பம்
ஆச்சர்யத்துடன்
ஞானக்கூத்தனைக் கேட்டேன்
இன்னும் இங்கேவா இருக்கிறோம்
அவர்
சூளைச் செங்கல் குவியலிலே
தனிக்கல் ஒன்று சரிகிறது
என்றார்
என்ன இது விநோதம்
இருந்த இடத்திலேயே இருப்பது
என்றேன்
இருப்பதை உணர்வதே வாழ்க்கை
என்றார்
நகுலன் எங்கே என்றேன்
நவீனன் இறந்த மறுநாளே இறந்துவிட்டார்
என்றார்
உங்கள் சமீபத்திய கவிதை என்றேன்
ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ
என்றார்
நன்றி என்றேன்
அப்பொழுது தான்
ஒரு அணுகுண்டு வெடித்த
சப்தம் கேட்டது
இருவரும்
அகதிகள் முகாமிற்குத் திரும்பினோம்

## பேச்சு

நான் சைக்கிள் ஓட்டுவேன்

நான் பஸ் ஓட்டுவேன்

நான் ஆட்டோ ஓட்டுவேன்

பஸ்களுக்கிடையில் சிக்கி
ஆட்டோ கவிழ்ந்து விடும்

நான் கார் ஓட்டுவேன்

பஸ் மோதி
கார் நசுங்கிவிடும்

நான் ஓடிப்போய்
ட்ரைவரின் மடியில்
உட்கார்ந்து விடுவேன்

அப்படி வா
எல்லோரும் பஸ்ஸில் போகலாம்

## அன்பு

அன்பு என்பதே
காண அரிதான உலகில்
கொடூரம் அளப்பரியதாக உளது
ஊசி ஏறிய அவள் கைவிரலில்
ரத்தம் கசிகிறது
துண்டித்த ஊசி துடித்துக்கொண்டிருக்கிறது
மேலாளன் வருகிறான் அவன்
வணிகப் பேச்சோடு
சிகித்ஸைக்கு வேண்டிய அன்பு கூடவா இல்லை
துணிகள் எங்கும் சிதறிக் கிடக்கின்றன
மனிதன்
நிர்வாணமாய்த் திரிகிறான்
நகரமெங்கும்
அன்பைத் தேடி
பயத்துடன்

## ஒரு நகர்வு

ஒலி எழுந்தது
மெல்ல நகர்ந்தது
ஒலியைத் தொடர முடிந்தது
சிறிது நேரத்தில்
பிரதான சாலையில்
சங்கமமாயிற்று

இரைச்சலில்
ஒலி உருவிழந்து
உருண்டைப் பந்து போல்
கூச்சலாய் ஓடத் துவங்கிற்று
மற்ற உருவிழந்த
ஒலித்துகள்களுடன்
கச பிச குக கெகெ பிகெ டக்கு புக்கு
பல்வேறு பிரதான சாலைகளின்
உருண்டைப் பந்துகளெல்லாம்
ஒன்று சேர்ந்து
நகரத்தின் மேல்
வட்டமிட்டபடி
வானைக்கீறி
வெளியேறிக் கொண்டிருந்தன
புதிய புதிய ஒலித்துகள்கள்
உருண்டைப் பந்துகளாகி
வானுலகம் சென்று கொண்டிருந்தன

அமைதியான கிளைச்சாலை ஒன்றின் வழியாய்
சென்று கொண்டிருந்தேன்
ஒலித்துகள் ஒன்று தட்டுப்பட்டது
லபக்கென்று பிடித்து மாத்திரையாய் விழுங்கினேன்
உள்ளெங்கும் ஒலித்துகள்கள் ஓடிவிளையாடிக்கொண்டிருந்தது
பிரதான சாலையுள் நுழைந்தேன்
நரம்புகள் உப்ப
பந்து போல் ஆனேன்
உருண்டு பருத்து மேலெழும்பினேன்
வானைக்கீறி
வெளியைக் கீறி
அப்பாலுக்கும் அப்பால்
பயணமாகிக் கொண்டிருந்தேன்
இருளும் ஒளியும் இருகண்களென
பின்புறமும் முன்புறமும்
இருபுறமும் நாற்புறமும்
இருக்க முடிந்தது.

ஒளியுடல்
பரந்த வெளி
எங்கும்
பரந்து விரிந்த
இருப்பு
இருப்பில் அனைவரும் ஐக்கியம்
அனைவருக்கும் ஒரே மனம்
பால்வெளியில் நீந்திக் கிடைத்த மனம்
தொலைவில் தவித்துக் கொண்டிருக்கும் அறிவு

ஒவ்வொன்றாய்
ஒளிக்கடலில்
ஐக்கியமாகும்
ஒலித்துகள்கள்

## சாளரம்

இருளையே பார்த்துப் பார்த்து வந்த
கண்கள்
இருண்டு பெருத்து
வறண்டு விட்டன
ஒரு சின்ன ஒளிக்கீற்று
வந்தாலும் கூட
பெருந்தவம் செய்து கிடைத்த வரமாய்
அலை பாயத் துவங்கின
ஒரு கணத்தின் கணமெனத்
தோன்றிய ஒளிக்கீற்று
சலிப்புற்று
உன் அகோரப் பசிக்கு
என்னை உணவாக்காதே
எனப் பதுங்கிச் சென்றது
எங்கு தேடியும்
கிடைக்காத ஒலிக்கீற்றை எண்ணி
உள் ஆழம் எங்கும்
தேடத் துவங்கிற்று
அற்ப கண்
காரிருளை எதிர் கொண்டு
வெளி இருளே மேலென்று
வெளிப்பரப்பில்
ஆயத்துவங்கிற்று
அண்டத்தின் ஏதோ ஒரு மூலையில்
பதுங்கிக் கிடந்த ஒளிக்கீற்றின்
கனவுச் சாபத்தால்
உடம்பெல்லாம் கண்ணுகி
ஒவ்வொரு கண்ணும்
வீங்கிப் பெருத்து
இருளில்
எங்கும் ஒரே ரணகளம்
ஒவ்வொரு கண்ணும்
ஒளிக்கீற்றுக்காய்
துழாவிக் கொண்டிருந்தது
கண்கள்
எங்கு பார்த்தாலும்
கண்கள்
ஒவ்வொரு கண்ணும்
தான்தான்
முதலில் ஒளிக்கீற்றுக்காய்
பிறந்ததாய்
போரிடத் துவங்கிற்று
கும்மிருட்டில்
ஒவ்வொரு கண்ணும்
இன்னொரு கண்ணை
தேட ஆரம்பித்தது
எப்படியும்
ஒரு மந்திர ஒளிக்கீற்றில்
ஒரு கண் துலங்கும் என
அண்டப் பெருவெளியில்
எக்கண்ணுக்கும் படாமல்
மாயமாய் மறைந்தது
ஒளிக்கீற்று

## அந்தப் புளிய மரத்தை

நேற்றிலிருந்து
அந்தப் புளிய மரத்தை
வீழ்த்திக் கொண்டிருக்கிறார்கள்

முதலில்
புளிய மரத்தின் உச்சியை அடைந்தார்கள்
சிறிய சிறிய கிளைகளை
முறித்துக் கொண்டார்கள்
இலைகள் மலர்கள்
உதிர உதிர சிறிய
கிளைகள் பூமியைத் தழுவின

சிறிய கிளைகள் இழந்த மரம்
அருவ உருவில்
வானத்தை
உறிஞ்சிக் கொண்டிருந்தன

மரத்திலிருந்து இறங்கியவர்கள்
ஒரு மாபெரும்
மரமறுக்கும் ரம்பத்தைக்
கொண்டு வந்தார்கள்

புளிய மரத்தின்
அடியைக் குறிபார்த்து
கீறிக் கொண்டிருந்தார்கள்
பொடித்துகள்கள் \
இருபுறமும் கசிய

நெடுமரத்தைச் சாய்த்தார்கள்
மீதம் உள்ள கிளைகளையெல்லாம்
வெட்டிவெட்டி அடுக்கினார்கள்

கட்டை வண்டியில் ஏற்றிப்
புறப்பட்டார்கள்

இலை தழைகளுக்கிடையே
ஒரு புளியஞ்செடி
தன்னைப் பார்த்துக் கொண்டது

## அமைதி அமைதி - 2

என்னுடைய முதல் அபத்தக்கவிதை
வெளியானது
காற்றைக் கீறியபடி ஒரு புலி
சினிமாக் கொட்டகைக்குள்
ஏழை ஜனங்கள் தூங்கிக் கொண்டிருந்தார்கள்
மெல்ல வாயிலே அடைந்தேன்
ஊறுகாய் ஜாடியும்
உப்பு ஜாடியும்
பக்கத்தில் அமைதியாய் இருந்தது
செலுத்தப்பட்ட அம்புகள் எல்லாம்
மண்ணை முத்தமிட்டு
மீண்டும் உறைக்குள் வந்தன
தளபதி வந்தார்
பரிவாரங்களுடன்
எங்கள் கோயில்களைச் சுரண்ட
புதிய தலைவன் வேண்டும்
கோஷங்கள் எங்கும் அமைதியாய்

## விடு*

இந்த மரங்களுக்கன் மேல்
கருணை உண்டென்றால்
என்னை எரித்துவிடு
இந்த மலர்களுக்கென் மேல்
கருணை உண்டென்றால்
என்னைப் புதைத்துவிடு
இம்மனிதர் களுக்கென் மேல்
கருணை உண்டென்றால்
என்னை வாழவிடு
இச்சிட்டுக் குருவிகளுக்கென் மேல்
கருணை உண்டென்றால்
என்னைப் பறக்க விடு

* இந்தக் கவிதையை 1981-ஆம் ஆண்டு தர்மபுரியில் இருந்து ஹோகேனக்கல் நீர்வீழ்ச்சிக்கு பஸ்ஸில் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோதே ஆத்மாநாம் எழுதினார்.

## காலம் கடந்த

இன்றைய கிழமை மறந்து விட்டது
இன்றைய தேதி மறந்துவிட்டது
இன்றைய மாதம் மறந்துவிட்டது
இன்றைய வருடம் மறந்துவிட்டது
சாலையில் செல்லும் வாகனங்கள் மட்டும்
இது இருபதாம் நூற்றாண்டு என்கின்றன
அது ஒன்று தான்
சொல்லி சொல்லி
நினைவில் மரத்துப் போயுள்ளது
மற்றபடி
அதே தேர்த்திரு விழாக்கள்
கும்பாபிஷேகங்கள்
மதகுரு மார்கள்
மந்திரிப் பெயர் சூட்டிக் கொண்ட
அரச குமரர்கள்
சொத்துச் சண்டைகள்
பிரியும் குடும்பங்கள்
போட்டி பொறாமை காழ்ப்புணர்ச்சி
போர் வெறி
கொலை மிரட்டல்
ஜனநாயக சர்வாதிகாரம்
சட்டப் புத்தகங்கள்
ஆழ்ந்துறங்கும்
மனித உரிமைகள்
நிலையின்மை
கவலையை மறக்க
பத்திரிகைகள் சினிமா
ஜோதிட சமய இதழ்கள்
எதற்கிந்தக் கவிதை
எந்தக் குடிமகனுக்காக
நான் எழுதுவதை நிறுத்துகிறேன்
என் காலடியில்
கொஞ்சும் நாய்குட்டிக்காக
இன்னும் எனது நம்பிக்கை
நசித்துப் போகவில்லை
இன்னமும் கொஞ்சம்
அன்பு மீதமிருக்கிறது

## கேட்கப் படுவதும்
## கேட்கப்படாததும்

உலகத்திடமிருந்து நான் எதிர்ப்பார்ப்பது
அன்பை
கருணையை
மனிதாபிமானத்தை
புரிந்து கொள்ளுதலை
உண்மை வெளிப்பாட்டை
இன்னும் பிற
நீ உலகத்திடமிருந்து மிகவும் எதிர்பார்க்கிறாய்
என்கிறது மனித இனம்
நான்
வேலையைக் கேட்கவில்லை
உணவைக் கேட்கவில்லை
குடியிருப்பைக் கேட்கவில்லை
கேட்ப தெல்லாம் ஒன்றுதான்
நான் வேறு நீ வேறு
என்பது பொய்
நானும் நீயும் ஒன்றுதான்
என்பதை உணர்
என்று தான்

## ஆரம்பம்

இங்கே வருமுன்னர்
இருந்தவை
பெரும் பாறை
ஓயாமல் கூச்சலிடும்
புரண்டாடும் இக்கடல்
பனிமலை
வெயிலில் பளபளக்கும்
பேருறு
செம்மண், களிமண், வண்டல் மண்
காற்று எழுப்பும் பெரும் புழுதி
எல்லாம் எங்கெங்கோ
இயங்குகையில்
உன் வயிற்றில் ஹோம குண்டம்
கனன்று கனன்று பந்தாய் விரியும்
தீப்பூக்கள் உன்னுள்
மேலும் கீழும் ஆகாயம்
எங்கும் நிசப்தம்
பசுமை

ஒரு தூசியின் ஒரு கோடிப் பங்கில்
ஒரு சிற்றணுவாய்
நான் தோன்றினேன்
நக்ஷத்ரக் கண்கள் சிமிட்ட

## கவிதை தலைப்பிடப் படாதது

இந்தக் கவிதை
எப்படி முடியும்
எங்கு முடியும்
என்று தெரியாது

திட்டமிட்டு முடியாது
என்றெனக்குத் தெரியும்
இது முடியும் போது
இருக்கும் (இருந்தால்) நான்
ஆரம்பத்தில் இருந்தவன் தானு

ஏன் இந்தக் கேள்வி
யாரை நோக்கி

இன்றிரவு உணவருந்தும்
நம்பிக்கையில் இங்கிருப்பேன்

இப்படியும் ஓர் நம்பிக்கை

இருந்த நேற்று
எனக்கிருண்ட கணங்கள்

அவற்றின் தவளைக் குரல்கள்
கேட்கும் அடிக்கடி
அதனை ஒதுக்கத் தெரியாமல்
தவிக்கையில்

நிகழ்ச்சியின் சப்தங்கள்
செவிப்பறை கிழிக்கும்

நாளை ஓர் ஒளிக்கடலாய்
கண்ணைப் பறிக்கும்

இருதயம்
இதோ இதோ என்று துடிக்கும்

## இன்னும்

புறாக்கள் பறந்து போகும்
கழுத்திலே வைரத்தோடு
கிளிகளும் விரட்டிச் செல்லும்
காதலின் மோகத்தோடு
காக்கைகள் கரைந்து செல்லும்
தானியம் தேடிக் கொண்டு
குருவிகள் கிளுகிளுப் பூட்டும்
கிளைகளில் தவழ்ந்து கொண்டு
பாசிக் கரை படர்ந்த
தாமரைக் குளத்து நீரில்
நீளக்கால் மெல்ல அளையும்
கரை நிழல் கீழமர்ந்து
பழங்களைக் கடித்துத் தின்ற
அணில்களும் அவ்வப்போது
கேள்விகள் கேட்டாற் போலத்
தலைகளைத் தூக்கிக் காட்டும்
சிவனருள் பூசாரி
குடத்தில் நீரெடுப்பார்
மந்திரம் சொல்லும் வாயால்
தம்மையே நொந்து கொண்டு
கற்புடைப் பெண்டிற் கூட்டம்
அக்கரைக் கற்கள் மீது
ஊர்க் கதை பேசிக் கொண்டு
துணிகளைத் துவைத்துச் செல்லும்
வயல்களுக்கப்பால் இருந்த
சூரியன் மேலே சென்றான்
எருமைகள் ஓட்டிச் சென்ற
சிறுவனின் தலையில் வீழ்ந்தான்

## மறுபடி மறுபடி

சொல்லச் சொல்ல
சொற்கள் மயங்கும்
எழுத எழுத
எழுத்து இறக்கும்
குழம்பும் மனதில்
எழுத்தும் சொல்லும்
குப்பைமேட்டில்
கிடக்கும் பொருட்கள்
வரிகள் ஆகும்
வார்த்தைகள் எல்லாம்
விளக்கும் தத்துவம்
தான் என்ன
காற்றில் இருக்கும்
வார்த்தைகள் எல்லாம்
காதில் சொல்லும்
ரகசியம் என்ன
குருவை சிஷ்யன்
மறுபடி மறுபடி
குருவின் உதட்டில்
மறுபடி மறுபடி
சிஷ்யன் மறைந்தான்
குருவாய் மாறி

## நீரும் நிலமும்

முட்டி மோதிப் பார்க்கிறது கடல்
மணலைத் தன் நீலப்புடவைக்குள்
சுருட்டிக் கொள்ள, மிக
பாசத்தோடும் நேசத்தோடும்
மணல், பாறை — மலையாய் நிற்கிறது
மூன்றில் ஒரு பங்குதான் என்றாலும் இது
நீருருண்டை அல்ல
மண்ணுருண்டை தான்.

## காலம்

என் கால்கள் நடந்த தெரு
ஒரு பரத்தையாய் மாறிவிட்டது
குச்சு வீடுகள்
செங்கற்களை ஒளித்துக் கொண்டு
சுண்ணும்பில் மினுக்குகின்றன
மறைக்கும் கோவணச் சுவர்கள்
உரத்து அழைப்பை விடுக்கின்றன
பேடித் தலைவர்கள்
பிறந்த நாள் மாலை, கிரீடம்,
புன் சிரிப்புடன்
மக்களை ஏளனம் செய்கின்றனர்
போலி உலகப் படங்களின்
விளம்பரங்களோடு,
கட்டை விரலை முட்டி, ரத்தம் கசிய
முத்தம் கொடுத்த கற்கள்
மண்ணுள் மறைந்து விட்டன.
நான்
நடந்த தெரு மண்
இன்று,
எனக்கு முன்னும் பின்னும்
பிறந்த மனித விலங்குகள்
வாகனங்களால் அரைபட்டு
முகப்பூச்சு சுண்ணும்பென
மிருதுவாய் மாறிவிட்டது
தெருவில் மனிதர் கால்களை
மட்டும் அடுக்கி நான் நடக்கிறேன்
விஷக்காற்றை உறிஞ்சிக் கொண்டு,

## முடிவு

இன்று முடிந்து விட்டது
முடியாமல் தொடர்ந்து
முடிவைத் தேடித் தேடி
அலையும் கால்கள்
சோர்ந்து விழும் படுக்கையில்
மனம் மேலே இன்னும் மேலே
பறந்து செல்லும்
எங்கே முடிவு
படபடக்கும் காகிதங்கள் கேலி செய்யும்
சல சலக்கும் இலைகள் தாளம் போடும்
எப்படி இருக்கும் முடிவு
காற்றிலா மண்ணிலா நீரிலா
காலம் காலமாய்த் தேடியவர்
இருக்கின்றார்
ஆழ்ந்த உறக்கத்தில்
இம் மண்ணுக்குள்
என்றோ என் கனவில்
வந்தது முடிவு
சரியாகப் புலப்படவில்லை
பரந்த வெளியில் நான்
சூரியன் தலைப்பக்கம்
கடல் காலடியில்
எங்கே உன்னைக் காணோம்
இவ்வளவு காலமாய் என்றேன்
யார் நீ என்றொரு குரல்
உன்னைத் தேடி அலுத்த
ஆரம்பம் என்று கூற
உன்னுள்தான் இருக்கிறேன்
என்றது முடிவு
பின் இப்போது என்பதற்குள்
காலை புலப்பட்டது.

## கவிதை

காலியாய் இருக்கும் கொட்டகை
நாற்காலிகள் போல் அமர்ந்து
கேட்கின்ற மக்கள் கூட்டம்
தலைவர் பேச்சை மெய்ம்மறந்து

வாங்கும் சக்தி இல்லை உம்மிடம்
கொடுக்கும் சக்தி இல்லை எம்மிடம்
பேச்சின் சக்தி தெரியும் அவ்விடம்
எழுத்தின் சக்தி தெரியும் அவ்விடம்

சட்டம் தீட்டும் அவன் கையைக்
கட்ட எத்தனை நாள் ஆகும்
சங்கிலிகள் சிறைச்சாலைகள் எவற்...

செருப்புச் சத்தம் கூச்சல் குழப்பம்
சின்னா பின்னம் மீண்டும் காலியாய்.

## சுற்றி

அரச மரத்தைச் சுற்றி
        பிறந்த பிள்ளை ஒருவன்
வேப்ப மரத்தைச் சுற்றி
        பிறந்த பிள்ளை ஒருவன்
எந்த மரத்தைச் சுற்றி
        பிறந்த பிள்ளை இவன்
ஏதேனும் தறுதலை மரமாக இருக்குமோ?

## என் அறை

என் அறை
உங்களுக்குப் பழக்கமானது தான்
உங்களுக்கு மட்டும் என்ன
எனக்கும் தான்

ஏன் அறைகள்
நம்முடன் பழகுகின்றன
இல்லை நாம்
அறைகளுடன் பழகுகிறோம்
நாம் எல்லோருமே
அறை வாசிகள்
அறைக்குள் காற்று வாங்குவோம்
கவிழ்ந்து படுத்திருந்து
தவழ்ந்து விளையாடுவோம்
அறைக்குள் நம்முடன்
இருக்கின்றன
நீர்ப்பானை
உணவளிக்கும் அடுப்பு
ஏராளமான பேப்பர்
அதோ சுவர் மூலையில் பல்லி
அபாயம் என்று
சுட்டிக் காட்டும் சுட்டு விரல்
பறக்கும் மனிதன்
குரங்கு மனிதன் பறக்கும் மனிதன்
பெரிதாய் மூலை காட்டும்
பெரிய இளவரசி
கற்சுவர்கள்
சுண்ணாம்பின் பின்னே
நாம் நாகரீக குகைவாசிகள்
பேனா எலும்புடன்
சுற்றி வரும் கற்கால மனிதர்கள்
இத்துடன் நம்மை நாமே
ஏமாற்றிக் கொள்ளும்
பழைய கதை முற்றும்

நாம் புத்திசாலிகள்
பேப்பரில் விதை விதைத்து
ஏரோட்டும் புத்திசாலிகள்

புரட்சிக்காய்
காத்திருந்து கொட்டாவி விடும்
புத்திசாலி நடுத்தரங்கள்

வீரமாய் மார்தூக்கி
முதுகைச் சொரியும்
புத்திசாலிப் பன்றிகள்

முதலில் ஒழிப்போம்
நம் புத்திசாலித்தனம்
நிர்வாணமாய் நிற்போம்
நீரலைகள் கரைகளிலே

## வீழ்ச்சி நிலை ஒன்று

அறிவு எதற்கு
பொருள் எதற்கு
அனுபவங்கள் எதற்கு
காலம் வெளி
ஒன்று இரண்டு
என
தேடித் தேடித் தேடித்
தெளிவின்மையில்
ஒரு சுகங்கண்டு
மருண்டு
அதுவேயாகி
காண்போரைச் சினந்து
ஏன்
ஆர்ப்பரிக்கும் கடலலைகள்
நகைக்க
சிறுமீன்கள் நம்முடனே
மௌன மொழி பேச

## ஒரு புளிய மரம்

ஒரு புளியமரம் சமீபத்தில் என் நண்பனாயிற்று
தற்செயலாய் அப்புறம் நான் சென்ற போது
நிழலிலிருந்து ஒரு குரல் என்னைத் தெரிகிறதா
திடுக்கிட்டேன் அப்புளியமரம் கண்டு
நினைவிருக்கிறதா அன்றொரு நாள்
நீ புளியம் பழங்கள் பொறுக்க வந்தபோது
என் தமக்கையின் மடியில் அயர்ந்து போனாய்
அப்போது குளிர்ந்த காற்றை வீசினேனே
உன் முகத்தில் உடலில் எங்கும்
வா எப்படியும் என் மடிக்கு

## சில எதிர்கால நிஜங்கள்

அரிசி மூட்டையிலிருந்து சிதறிய
அரிசி மணிகள் போல்
தப்பித் தவறி திசை தடுமாறி ஓடி வந்த
சின்னஞ் சிறு சிற்றெறும்பு போல்
மொஸைக் தரையில் தவறிப் போன
ஒற்றைக் குண்டூசி போல்
இவற்றைப் போன்ற இன்னும்
ஆயிரக் கணக்கான போல்கள்

## அமைதிப் படுகையில்

அற்புத மரங்களின் அணைப்பில்
நான் ஒரு காற்றூடி
வேப்ப மரக்கிளைகளின் இடையே
நான் ஒரு சூரியரேகை.
பப்பாளிச் செடிகளின் நடுவே
நான் ஒரு இனிமை
சடை சடையாய்த் தொங்கும் கொடிகளில்
நான் ஒரு நட்சத்திரம்.

## தோற்றம்

தோற்றம் சாதாரண விஷயமில்லை
ஒவ்வொருவருக்கும் தோன்றத் தெரிந்திருக்க வேண்டும்
நிஜ வாழ்க்கையில் மட்டுமல்ல
கற்பனை வாழ்க்கையிலும் தான்
நிஜ வாழ்க்கையில் தோன்றுவது சுலபம்
ஏனெனில் அங்கு அனைவரும் தோற்றம் அளிக்கிறார்கள்
டீ கொடுப்பதில் சாப்பாட்டுக்கு அழைப்பதில்
திருமணங்கள் நடத்துவதில்
ஆபிஸ் போவதில்
சினிமா போவதில்
நாடகங்கள் போவதில்
இசை கேட்பதில்
இப்படிப் பல்வேறாக
கற்பனை உலகில் தோன்றுவது கஷ்டம்
அங்கும் சில உண்மைகள் இருக்கிறார்கள்
ஒரு விஞ்ஞானியாக
ஒரு தத்துவ வாதியாக
ஒரு சிற்பியாக
ஒரு ஓவியனாக
ஒரு கவிஞனாக
ஒரு இசை ரசிகனாக
ஒரு நாடக இயக்கக் காரராக
ஒரு கூத்துக் காரராக
ஒரு நாட்டிய ரசிகராக
ஒரு திரைப்படக் காரராக
இவற்றில் நாம் யார்?
கண்டு பிடிப்பது கஷ்டம்
ஏனெனில் எல்லாவற்றிலும்
கொஞ்சம் கொஞ்சம் உள்ளது
அதன் கண்டுபிடிக்கும் காலத்தில் கூட
நாம் கண்டு பிடிக்க மாட்டோம்
மீண்டும் இவ்வாறு இருக்க

## ஒன்றும் இல்லை

ஒன்றும் இல்லை
சும்மாதான்
வேறு ஒன்றும் இல்லை
ஆரம்பமே ஒன்றும் இல்லை
பின் எப்படி இவ்வளவும்
இவை யாவும் ஒன்றுமில்லை
நானும் நீயுமா?
ஆமாம் ஒன்றுமில்லை
நாம் பேசுவது
நாம் எழுதுவது
நாம் வரைவது
நாம் பதிப்பிப்பது
நாம் படிப்பது
எதுவும் ஒன்றும் இல்லை
பின் எதுதான் அந்த ஒன்று
அதுவும் ஒன்றுமில்லை
ஒன்றுமில்லையில் இவ்வளவா
பின் அந்த ஒன்றில்
நம்மையும் மீறிய ஒன்று

## மேலும் ஒரு நான்

நான் ஒரு ஞானியுமில்லை
நான் ஒரு சித்தனுமில்லை
பித்தம் பிடித்தும் பிடிக்காத மேதை நான்
படித்தும் படிக்காத புலவன் நான்
வைத்தியம் தெரிந்தும் செய்து கொள்ளா
[நோயாளி நான்
உண்மையைத் தொட்ட ஒரு பேதை நான்
உத்தமனில்லை ஆனால் பொய் சொல்லத் தெரியாது
சத்தியவான் இல்லை ஆனால் உண்மையே பேசுவேன்
இவற்றையும் மீறி இருக்கிற கொஞ்சம்
[மட்டுமே நான்.

## இக்கணத்தில் பழையதும் புதியதும்

புல்வெளியின் பிரமிப்பில்
காதல் பனித்துளிகள்
நெஞ்சில் அலைபாயும் கேள்விகளுக்கு
பதில்
கடல் நுரையின் விண்வெளியில்

## அழைப்பு

இரண்டாம் மாடியில் - உப்பரிகையில்
ஒற்றைச் சன்னல் அருகில்
நான் என்னோடு
உணவருந்திக் கொண்டு
அருகில் வேப்பமரக்கிளை
மீதிருந்த காகம் அழைத்தது
பித்ருக்களோ தேவர்களோ
என எண்ணி
ஒரு சிறு கவளச் சாதத்தை
வெளியே வைத்தேன்
சாதம் சாதமாக
காகம் பறந்து விட்டது
யாருடைய பித்ருக்களோ
நானறியேன்

## கேள்வி

காலை எழுந்ததும்
இரை தேடத்துள்ளும்
இவ்வணில்
இரவு எங்கே உறங்குகிறது
மலர்க்கிளைப் படுகையிலா
ஆற்று மணற் சரிவிலா
சதுர வட்டக் கோண மயக்கச் சந்து பொந்துகளிலா
நிச்சயம் நூற்றுக் கணக்கில் இருக்கும்
இவ்வணில்கள்
ஒன்றல்ல தம் குழந்தைத்தனமான முகங்களுடன்
சிறு பிள்ளைக்கைகளுடன்
அனுபவித்து உண்ணும்
இவை
தங்களைப்பற்றி என்ன கனவு காணும்
உணவையும் உறக்கத்தையும் தவிர

## பழக்கம்

எனக்குக் கிடைத்த சதுரத்தில்
நடை பழகிக் கொண்டிருந்தேன்
கால்கள் வலுவேறின
நடப்பதில் ஒரு மகிழ்ச்சி உண்டாயிற்று
என் நடப்பைத்
தெரிந்து கொண்ட சில மாக்கள்
விளம்பினர்
ரோட்டிலேயே நடக்க முடியவில்லை
ஒரு சதுரத்திற்குள் நடக்கிறானாம்
நான் என்ன நூறு நாட்கள் நூறு பாம்புகளுடனா
என் கால்கள்
என் நடை
என் சதுரம்

## நன்றி நவிலல்

இந்தச் செருப்பைப் போல்
எத்தனைப்பேர் தேய்கிறார்களோ
இந்தக் கைக்குட்டையைப் போல்
எத்தனைப்பேர் பிழிந்தெடுக்கப் படுகிறார்களோ
இந்தச் சட்டையைப் போல்
எத்தனைபேர் கசங்குகிறார்களோ
அவர்கள் சார்பில்
உங்களுக்கு நன்றி
இத்துடனாவது விட்டதற்கு

## சும்மாவுக்காக ஒரு கவிதை

உங்கள் நண்பர்களைச் சொல்லுங்கள்
நீங்கள் யாரென்று சொல்லுகிறேன்
என்றார் ஒரு பேரறிஞர்.
நான் சொன்னேன்
நீங்கள் யாரென்று சொல்லுங்கள்
உங்கள் நண்பர்களைச் சொல்லுகிறேன்
முழித்த முழி முழியையே முழுங்கும் போல
நீங்கள் யாரானால் என்ன
நான் யாரானால் என்ன
அனாவசியக் கேள்விகள்
அனாவசியப் பதில்கள்
எதையும் நிரூபிக்காமல்
சற்று சும்மா இருங்கள்

## உலக மகா யுத்தம்

ஒரு கூரை மேல்
காக்கைக்கும் அணிலுக்கும் சண்டை
அணில் துரத்த காக்கை பறந்தது
காக்கை பறக்க அணில் தாவியது
முடிவில்
அணில் பறந்தது
காக்கை ஓடியது
ஒன்றுக்கும் ஒன்றும் ஆகவில்லை

## காகிதத்தில் ஒரு கோடு

குறுக்கு நெடுக்குக் கோடுகள்
ஒவ்வொன்ருய்ப் போடுகிறீர்கள்
ஒன்று
நூறு
ஆயிரம்
பத்தாயிரம்
ஒரு லட்சம்
பத்து லட்சம்
ஒரு கோடி
பத்து கோடி
நூறு கோடி
மேலும் மேலும்
அதன் எல்லா இயல்புகளில் போட்டு விடுகிறீர்கள்
வேறு வழியே இல்லை
பின்னர் சின்னதும் பெரியதுமாய்ப் போடுகிறீர்கள்
அதுவும் மேற்படி
மயக்க முடிவுக்கு வருகிறீர்கள்
அனைத்திற்கும் முடிவில்
கோடுகளே இல்லாமல் போய்விடுமோ
உங்கள்
ஆரம்ப வெள்ளைத் தாளைப்போல
ஆனல்
வெள்ளைத் தாளிலும்
நமக்குத் தெரியாமலும்
சில கோடுகள்
குறுக்கிலும் நெடுக்கிலும் இருக்கும்

## புத்தம் புதிய

என் பேனாவை
ஒரு குழந்தையிடம்
கொடுத்தேன்
ஒரு கோட்டோவியம்
ஒரு கவிதை
ஒரு காவியம் எழுதி
என்னைப் பார்த்துச் சிரித்தது
அற்புதத்திற்கும் அப்பாற்பட்ட படைப்பு
என்னை அழைத்தது

## மறுபக்கம்

தரையில் நான்
சுவரில் பல்லி
தொங்கும் விளக்கால்
ஆடும் நிழல்கள்
மங்கும் ஒலிகள்
மாலை இருளில்
தொலைவில் கேட்கும்
குழந்தையின் அழுகை
இருளில் கேட்கும்
குழாயின் ஒழுகல்
அறைக்குள் காற்றில்
வண்ணப் பூச்சிகள்
குறுக்கே பறக்கும்
வினாடிப் பிளவில்
அணைக்கும் இருளில்
சிரித்துக் கொண்டு
வானில் மிதக்கும்
கோலப் புள்ளிகள்
இடப்பெயர்ச்சி
சுழற்சியின் நடுவே
தரையில் பல்லி
சுவரில் நான்

## புதுக் குறளில் அற்புதப் பால்

அந்த
இரட்டைத் தென்னை மரங்களின்
இடை
மேலுயரும்
பளிச்சிடும் வெள்ளி
எதற்குச் சொந்தமது

## ஐயோ

சொன்னால் மறக்கிறார்கள்
எழுதினால் நிராகரிக்கிறார்கள்
தாக்கினால் தாங்குகிறார்கள்
சும்மா இருந்தால் தாக்குகிறார்கள்
அற்புத உலகம்
அற்புத மாக்கள்

## தரிசனம்

கடவுளைக் கண்டேன்
எதையும் கேட்கவே தோன்றவில்லை
அவரும் புன்னகைத்துப்
போய்விட்டார்
ஆயினும்
மனதினிலே ஒரு நிம்மதி

## ஒரு நிஜக்கதை

ஒரு நாள் இரவு
நிர்மலமான வானத்தின்
நட்சத்திரங்களை
எண்ண ஆரம்பித்தேன்

ஒரு மாபெரும் மனிதனாகி
எவரும் முயலாத
வேள்வியைத் துவங்கினேன்

எண்ணி எண்ணி எண்ணி
ணிஎ்ண ணிஎ்ண ணிஎ்ண
ண்எணி ண்எணி ண்எணி

சுத்த சரியாய் இருக்கையில்

திடீரென்று எங்கிருந்தோ
ஒரு நட்சத்திரம் வந்தது
அதையும் சேர்த்தேன்
மீண்டும் ஒன்று
இப்படியாக
ஒவ்வொன்றாய் ஒவ்வொன்றாய் ஒவ்வொன்றாய்
வந்து கொண்டேயிருந்தன
ஓய்ந்தனாய் ஓய்ந்தனாகி ஓய்ந்தனானேன்
நான் குறித்து வைத்திருந்த
அந்த எண்ணிக்கைச்சீட்டை
கிழித்து எறிந்தேன்
நிர்மல வானத்தில் நட்சத்திரங்கள்
கண் சிமிட்டி
தம்மையே சிமிட்டிக் கொண்டன
நான் என் மூலையில் சுருண்டிருந்தேன்

## போய்யா போ

நான் ஒரு கெட்டவன்
நான் பீடி பிடிப்பவன்

நான் ஒரு கெட்டவன்
நான் இலேச்சுருள் பிடிப்பவன்

நான் ஒரு கெட்டவன்
நான் ஒரு சிகரெட் பிடிப்பவன்

நான் ஒரு கெட்டவன்
நான் ஒரு பில்டர் சிகரெட் பிடிப்பவன்

நான் ஒரு கெட்டவன்
நான் பில்டர் கிங்ஸ் பிடிப்பவன்

நான் ஒரு கெட்டவன்
நான் சுருட்டு பிடிப்பவன்

நான் ஒரு கெட்டவன்
நான் பைப் பிடிப்பவன்

நான் ஒரு கெட்டவன்
நான் மூக்குப்பொடி போடுபவன்

நான் ஒரு கெட்டவன்
நான் வெற்றிலேப்பாக்கு போடுபவன்

நான் ஒரு கெட்டவன்
நான் புகையிலே போடுபவன்

நான் ஒரு கெட்டவன்
நான் ஜர்தா பீடா போடுபவன்

நான் ஒரு கெட்டவன்
உள்ளாடையும் பனியனும் அணிபவன்

நான் ஒரு கெட்டவன்
நான் பேண்ட்டும் ஷர்ட்டும் அணிபவன்

நான் ஒரு கெட்டவன்
நான் காரில் போகிறவன்

நான் ஒரு கெட்டவன்
நான் டாக்ஸியில் போகிறவன்

நான் ஒரு கெட்டவன்
நான் ஆட்டோவில் போகிறவன்

நான் ஒரு கெட்டவன்
நான் சைக்கிள்ரிக்ஷாவில் போகிறவன்

நான் ஒரு கெட்டவன்
நான் சைக்கிளில் போகிறவன்

நான் ஒரு கெட்டவன்
நான் பேருந்தில் போகிறவன்

நான் ஒரு கெட்டவன்
நான் நடந்து செல்பவன்

நான் ஒரு கெட்டவன்
நான் ராஜ பவனத்தில் இருப்பவன்

நான் ஒரு கெட்டவன்
நான் அரசு மாளிகையில் இருப்பவன்

நான் ஒரு கெட்டவன்
நான் ஈன்ற மாளிகையில் இருப்பவன்

நான் ஒரு கெட்டவன்
நான் ஈன்ற ப்ளாட்டில் வாழ்பவன்

நான் ஒரு கெட்டவன்
நான் வாடகை ப்ளாட்டில் இருப்பவன்

நான் ஒரு கெட்டவன்
நான் ஒண்டுக் குடித்தனக்காரன்

நான் ஒரு கெட்டவன்
நான் சேரியில் வாழ்பவன்

நான் ஒரு கெட்டவன்
..........................

இப்படியே சொல்லிக் கொண்டு போனுல்
யார் கெட்டவன்
யார் நல்லவன்

அவ்வளவு தானே
கெட்டவன் நல்லவன்
நல்லவன் கெட்டவன்

## வேலை

உங்கள் காலைத்தொழுகை முடிந்ததா
அவ்வளவு தான் உம் உணவு
ஊர் சுற்றுமல்
ஒழுங்காய்ப் போய்த் தூங்குங்கள்

## வெளியேற்றம்

சிகரெட்டிலிருந்து
வெளியே
தப்பிச் செல்லும்
புகையைப் போல்
என் உடன் பிறப்புகள்
நான்
சிகரெட்டிலேயே
புகை தங்க வேண்டுமெனக்
கூறவில்லை
வெளிச் செல்கையில்
என்னை நோக்கி
ஒரு புன்னகை
ஒரு கை அசைப்பு
ஒரு மகிழ்ச்சி
இவைகளையே
எதிர் பார்க்கிறேன்
அவ்வளவு தானே

## ஒரு கவிதை

ஒவ்வொரு நாளும்
புலரும் காலையில்
அவன் என்னைப் பார்க்கிறான்
நான்
என்
தூசிப்பற் பொடியுடனும்
முகக் கழுவல் மற்றும் பூச்சிலும்
கழிவை நீக்குவதிலும்
தாகத் தணிப்பிலும்
செய்திச் சுடர்களிலும்
பின் அனுவசிய விமர்சனத்தில்
ஈடுபடுவதையும் கவனித்து
தன் உஷ்ணத்தை
எனை நோக்கிப் பாய்ச்சுகிறான்
கருக்கென்கையில்
காகங்களின் (அகவல்களும்) கரைதல்களும்
குயிலின் மோகன ஸ்ருதியும்
தவறி விட்டன
ஓயாமல் கேட்டுக் கொண்டிருந்தது
தண்ணீர்ப் பம்பின்
அலுப்பூட்டும் அலறல்

## விடியலில் ஒரு கவிதை

அந்த மாபெரும்
பனிக்கட்டியின்
ஒரு முனையை
உடைத்தாகிவிட்டது
நண்பர்களால் நாம் அதனை
முழுவதும் உடைக்க வேண்டும்
உலகத்தின்
மிக உயர்ந்த புள்ளி
எவரெஸ்டில் இருப்பினும்
நமக்குத் தேவையான அளவு
சமவெளியை
நாம் தானே உருவாக்க வேண்டும்
நமக்குள் எதற்கு
உருகிக் கொண்டிருந்தும்
திடமாய் உள்ள பனிக்கட்டி
அதன் இரு முனையில்
நாம் இருந்தாலும்
நம் உருவம் நிழலாய்
ஏன் இருக்க வேண்டும்
ஒரு முனையை நான் உடைக்க
மறுமுனையை நீங்கள் உடையுங்கள்
சமவெளியில்
உறுதியாய்க் கைகுலுக்கி
உட்பரிமாற்றம் துவக்குவோம்
அமைதிப்பறவை
சிறக டித்துப் பறக்கட்டும்
நம் பார்வை
நேருக்கு நேர் சந்தித்து
மகிழ்ச்சி பரவட்டும்
சொல்லத் தகுமோ
இதுதான் வாழ்க்கை என

## இயக்க விதி

என் மனம்
ஓர் கண்ணாடி
வண்ணங்கள் அற்ற

ஒலி
ஒளி
அசையும் அசையா
பொருட்கள்
வெளி
உள் மற்றும் அகண்ட

கருத்துக்கள்
கேட்ட மற்றும் படித்த
காலம்
எப்புறமும் பறந்த

அனைத்தும்

உட்சென்று
வெளியேறும்
இரு பக்கமும்
இருக்கும் போல் தோன்றி
ஒரே பக்கமாய்
இயங்கும்

அற்புதம்

இந்நிலையில்
இக்கண்ணாடி
இவ்வுலகெங்கும்
ஒன்றெனின்
அக்கண்ணாடி
பல கூறு ஆன
ஒன்று போலும்

## விடுதலை

கண்ணாடிச் சிறைக்குள்
கண்ணாடிச் சிறை
அக் கண்ணாடிச் சிறைக்குள்
நான்

அக்கண்ணாடிச் சிறையைத்
திறந்து
வெளி வர முயல்கிறேன்

திறக்கும் வழியே இல்லை

எரிச்சலுற்று
உடைத்துவர
நினைக்கிறேன்
உள் மனப் போருக்குப்பின்
முயற்சியை விடுத்து
சும்மா இருக்க முடிவெடுக்கிறேன்

கண்மூடித் திறக்குமுன்
கண்ணாடிச் சிறையைக் காணோம்
எங்கும் முன்பிருந்த அதே ஒளி

## செடி

சாக்கடை நீரில் வளர்ந்த
ஒரு எலுமிச்சைச் செடி
போல் நான்
அளிக்கும் கனிகள்
பெரிதாகவும் புளிப்புடனும்
தானிருக்கும்
கொஞ்சம் சர்க்கரையை
சேர்த்து அருந்தினால்
நல்ல பானகம் அல்லவோ

## நிஜம்

நிஜம் நிஜத்தை நிஜமாக
நிஜமாக நிஜம் நிஜத்தை
நிஜத்தை நிஜமாக நிஜம்
நிஜமே நிஜமோ நிஜம்
நிஜமும் நிஜமும் நிஜமாக
நிஜமோ நிஜமே நிஜம்
நிஜம் நிஜம் நிஜம்

## முடிவில்

ஒரு பழைய துருப்பிடித்த
இரும்புப் பெட்டிக்குள்
என்னை
இருத்தி
ஒரு உறுதியான பூட்டால் பூட்டி
மூன்று நாட்கள்
மூன்று மணிகள்
மூன்று நிமிடங்கள்
மூன்று கணங்கள்
முடிவில் அழைத்தாலும்
நான்
இருந்த படியே
துருப்பிடிக்காத இரும்புச்சத்தோடு
வெளி வருவேன்
மேலும் (?)
அமைதியோடு

# ஆத்மாநாம் — சிறு வாழ்க்கைக் குறிப்பு (18-1-1951 —— 6-7-1984)

ஆத்மாநாமின் இயற்பெயர் S.K. மதுசூதன் தாய்மொழி கன்னடமாக இருந்த போதிலும் ஆத்மாநாமுக்கு தமிழில் இருந்த ஈடுபாடு அதிகம். 1951 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 18 ஆம் தேதி பிறந்தவர் சென்னையிலேயே வளர்க்கப்பட்டார். அம்பத்தூரில் சர் ராமசாமி முதலியார் உயர்நிலைப் பள்ளியில் கல்வி பெற்று பிறகு வைஷ்ணவா கல்லூரிக்குச் சென்றார். ஒரு வருட இடைவெளிக்குப் பிறகு மீண்டும் பட்டப்படிப்பை (B.Com.,) அதே கல்லூரியில் மாலை வகுப்புகளில் சேர்ந்து படித்தார். 1967 ஆம் ஆண்டு Southern Switch Gears என்ற கம்பெனியில் வேலைக்குச் சேர்ந்தார். 1968 ஆம் ஆண்டு வேலையை விட்டு விட்டு கணக்குத்துறை சேர்ந்த விஷயங்களைக் கற்க ஆடிட்டர் அலுவலகம் ஒன்றுக்குச் சென்றார். இந்தப் பின்னணி அவருக்கு Coramandel Garments என்ற கம்பெனியில் வேலை கிடைக்க ஏதுவாக இருந்தது. 3 ஆண்டுகளுக்குப் பிறகு 1971 இல் தயார் உடைகள் தயாரிக்கும் நிறுவனமான Ranka Apparelsக்கு மாறினார். இங்கிருந்துதான் ஆத்மாநாமின் சிக்கலான வருடங்கள் ஆரம்பிக்கின்றன. 1978 ஆம் ஆண்டு திரு. அய்யப்பன் என்பவருடன் சேர்ந்து TOP TEN என்ற தயார் உடைகளை ஏற்றுமதி செய்யும் நிறுவனத்தை உருவாக்கினார். இதே சமயத்தில்தான் 'ழ' இதழையும் தொடங்கினார். தன்னுடைய நிறுவனத்தைக் கட்டி எழுப்ப இரவுகளிலும் வேலை செய்ய வேண்டி வந்தது. இரண்டு மூன்று ஈடுபாடுகளில் ஒரே நேரத்தில் தீவிரமாய் இயங்கியபோது Affective Disorder என்ற மனநலத் தாக்குதல் ஏற்பட்டு 1979 ஆம் ஆண்டு புரசைவாக்கத்திலிருக்கும் Private Nursinghome ல் ஒரு மாதம் சிகிச்சை பெற்றார். சிகிச்சை அளித்தவர் Dr சாரதா மேனன். சிகிச்சைக்குப் பிறகு Intercraft என்ற கம்பெனியில் Export Officer ஆகப் பணிபுரிந்தார். ஆனால் அவருக்கு ஓய்வு முக்கியம் என்று மருத்துவர் கருதியதால் தொடர்ந்து பணிக்குச் செல்லமுடியாத சிக்கல் ஏற்பட்டது. மூளையின் அதி தீவிர இயக்கத்தைக் கட்டுப்பாட்டில் வைக்க ஆத்மாநாம், Lithium, Hypotrym, Largatyl, Fenargon போன்ற மருந்துகளை தொடர்ந்து சாப்பிட வேண்டி இருந்தது. 1983 ஆம் ஆண்டு தீபாவளிக்கு ஒரு வாரம் முன்பாக தனக்கு சிகிச்சைக்காகத் தரப்பட்ட மருந்துகளையே அளவுக்கு அதிகமாக உட்கொண்டு தற்கொலை செய்துகொள்ள முயன்றார். காப்பாற்றப்பட்டார்.

இந்த சமயத்தில் அவர் இடைவிடாது படித்துக்கொண்டிருந்த நூல் A.K. ராமானுஜனின் The Speaking of Shiva. *1983* ஆண்டு டிசம்பர் இறுதியில் Affective Disorder ன் இரண்டாவது தாக்குதல் ஆத்மாநாமுக்கு ஏற்பட்டது. *1984* ஜனவரி இறுதிவரை Private Nursinghome ல் சிகிச்சை அளிக்கப்பட்டது. *1984* ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் முழுவதும் அவர் பெங்களூரில் அவரது சகோதரர் திரு. ரகுநந்தனின் வீட்டில் இருந்தார். மார்ச் *9* ஆம் தேதி *(1984)* முன்பு குறிப்பிட்டபடியே தனக்குத் தரப்பட்ட மருந்துகளைக்கொண்டே இரண்டாவது முறையாக தற்சாவுக்கு முயன்றார். National Institute of Mental Health and Neurological Sciences மருத்துவ மனையில் அவருக்கு சிகிச்சை அளிக்கப்பட்டது. எல்லா மனநோயாளிகளைப் போலவே தன்னையும் பெங்களூரிலிருந்த (கன்னட) மனநல மருத்துவர்கள் நடத்துவதை அவர் மனம் ஏற்கவில்லை. மேலும் ஆத்மாநாமுக்கு சிகிச்சை அளித்த மருத்துவர்கள் Children Psychiatrist கள் என்பது முக்கியமான விஷயம். இந்த மருத்துவர்கள் ஆத்மாநாமின் சிருஷ்டிபரப் பகுதியை அறியவில்லை என்பதையும் கவனிக்க வேண்டும். *1984* ஆம் ஆண்டு மார்ச் மாதம் *10* ஆம் தேதியிலிருந்து *20* வரை NIMHNSல் சிகிச்சை பெற்று வீடு திரும்பினர். (ஜெயநகர்) வீடு திரும்பியபின் தனது சகோதரர் வீட்டில் எவரிடமும் எதுவும் பேசாமல் இருந்திருக்கிறார். ஏறத்தாழ "உயிரற்ற மனித உடம்பாக" ஆத்மாநாம் வீடுதிரும்பியதாக அவரது சகோதரர் திரு ரகுநந்தன் குறிப்பிட்டார். மார்ச் *1984* லிலிருந்து தனது இறுதி மறைவு வரை (ஜுலை, *1984*) ஆத்மாநாம் தனக்கு வந்த கடிதங்களையோ, பத்திரிகைகளையோ, அழைப்பிதழ்களையோ படிக்கவில்லை. பிரித்துக்கூடப் பார்க்கவில்லை. Talk Yourself to cure என்ற மருத்துவ முறையைப் பயன்படுத்தி ஆத்மாநாமால் யாரிடமும் மனம்விட்டு பேச முடியவில்லை — பெங்களூரில் தன்னுடைய சாவை முன்கூட்டித் தீர்மானித்ததுபோல ஏறத்தாழ *120* தபால் கார்டுகளை வாங்கி வைத்திருந்திருக்கிறார். நண்பர்களின் முகவரிகளை A to Z வரை update செய்து வைத்திருந்தார்.

— பிரம்மராஜன்

கவிதை என்பது ஒரு சொற்
கூட்டம் என்ற தனித்துவ
பார்வையை நிரூபித்தது
ஆத்மாநாமின் காகிதத்தில்
ஒரு கோடு. இந்த நூல்
இன்று நம்மைத் தாக்கும்
குறியீடுகளை வகைப்படுத்திப்
போட உதவும் சாதனம்.
கலாச்சாரத்தில் ஓங்கி ஒலிக்கும்
குரல்களின் ஆங்காங்கே, அப்படியே
திருத்தி அடையாளம் காண
உதவும் பரப்பு இத்தொகுப்பு.
கறுப்பு நிழலாய், ஒளிச்சிதறல்களாய்
எப்படி யெப்படியோ இங்கும்
எங்கேயும் விரவிக் கிடக்கும்
செய்தி. கவிதைப் பரப்பாகிறது.
நான் என்ற நானும்
சமூக-கலாச்சார நான்களும்
இக்கவிதைகளின் ஊடாக
உடைக்கப்படுகின்றன. இனியான
மொழி. இனிமேலான மொழியின்
துவக்கம் இத்தொகுதியில்.



முகப்பு ஓவியம் : Leonardo Nierman